# செந்தமிழ்ச் செல்வி




சிலம்பு-௫௯ தி. வ. ஆண்டு-௨௦௧௬ சித்திரை பரல்-௯

மே 1985

# "செந்தமிழ்ச் செல்வி"

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)



---

## உள்ளுறை

# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

சிலம்பு-ருசு  தி. வ. ஆண்டு உ0கசு, சித்திரை  பரல்-சு

மே 1985


---

## மாபாடியம் தந்த மாமுனிவர்

சைவ சித்தாந்தத்தின் தலைசிறந்த நூலாகிய சிவஞான போதத்தை இயற்றியருளியவர் மெய்கண்ட தேவர். அந்நூல் பன்னிரு சூத்திரங்களையுடையது. அந்நூலுக்கு மிகச்சிறந்த பேருரை இயற்றியவர் மாதவச் சிவஞான முனிவர் என்னும் பேரறிஞர் ஆவர். பாடியம் என்பது பேருரை எனப்படும். அந் நூலுக்கு முனிவர் இயற்றிய சிற்றுரை ஒன்றும் உண்டு. பேருரை வழியாகச் சைவ சித்தாந்தத்தின் நுண்பொருள் பலவற்றை அறிய லாம். இந்தப் பேருரை கொண்டு மெய்கண்ட தேவர் இயற்றிய சிவஞான போதம் எத்துணைப் பெருமைகளையுடையது என்பதைத் தமிழகம் நன்கு அறிய வாய்ப்பாயிற்று.

மாதவச்சிவஞான முனிவர் இற்றைக்கு இருநூறு ஆண்டுகட்கு முன் கி. பி. 1785ஆம் ஆண்டில் இறையடி யெய்தினர். ஆதலின் அவருடைய 200ஆவது ஆண்டு பிறந்தநாள் தமிழகத்தில் பல ஊர் களிலும் சிறப்பாகக் கொண்டாடப் பெறுகின்றது.

தமிழ்மொழி வளம்பெற வேண்டுமென்ற பெருநோக்கத்தோடு இலக்கண நூல்களுக்கு ஆசிரியர் பலர் எழுதியுள்ள உரைகள் பலவற்றை இவர் மிக ஆழ்ந்து படித்து, அவற்றிற் காணப்படும் சிறப்புகளைப் பாராட்டியும், குறைபாடுகளைக் களைந்தும் திருத்தங்கள் பல செய்துள்ளார்.

நன்னூலுக்குச் சங்கர நமச்சிவாயர் எழுதிய உரையைத் திருத்திச் செப்பஞ் செய்துள்ளார். இலக்கண உரை நூல்கள் சிலவற்றை ஆய்ந்து வழுக்களையும் ஐயப்பாடுகளையும் நீக்கித், தமிழ் மொழிக்குச் செய்துள்ள பேருதவி பாராட்டத்தக்கது.

பிறர் இயற்றிய நூல்களிற் பிழை கண்டபோது, கண்ணோட்டம் சிறிதும் இன்றி மறுத்து உண்மையுரைத்தலில் வல்லவர் என்பதற்கு இவரியற்றிய இலக்கண விளக்கச் சூருவளி என்னும் நூலே சிறந்த சான்றாகும். திருவாவடுதுறை மடத்தின் அடியவர் குழாத்துள் ஒருவராகிய அடிகளாரால் இயற்றப்பட்ட சிவஞான மாபாடியம் என்ற பேருரை நூல் நீண்ட நெடுங்காலம் வெளியில் உலவாது திருவாவடுதுறை மடத்துள் பாதுகாப்பாக அடங்கியே யிருந்தது. பின்னர் பேரறிஞர் பலர் முயன்று அவ்வுரைநூலை வெளியிற் கொணர்ந்தனர்,

பெருநில மன்னர்களும் சிற்றரசர்களும், பெருநிலக்கிழார் பலரும் தமிழ்ப்புலவர்களையும், தமிழ் மொழியையும் போற்றி வளர்த் தார்கள் என்பது உண்மை. ஆயினும் தமிழகத்தில் தலைசிறந்து விளங்கிய திருவாவடுதுறை, தருமபுரம் மடங்களும் வேறுசில மடங் களும் செம்மையாகப் பல நூற்றாண்டுகள் தமிழ்த் தொண்டு செய்தன என்பது மறுக்க முடியாத பேருண்மையாகும். அழிந்து போகாதவாறு பழைய நூல்கள் பலவற்றைப் பாதுகாத்து வைத் திருந்து தக்கவர் வாயிலாக வெளியிடச் செய்தும் கற்பவர் பலருக்கும் பேருதவி செய்தும் செய்தற்கரிய பல பணிகளைச் செய்தன என்பதும் யாவரும் நினைவிற் கொள்ளத்தக்கதாகும். அத்தகைய நிறுவனங் களைப் பாராட்ட வேண்டுவது தமிழர்தம் தனிப்பெருங் கடமை யாகும்.

சமயத் துறையிலும் தமிழ் இலக்கண இலக்கியத்துறைகளிலும் அடிகள் இயற்றிய நூல்கள் இருபத்தொன்பது என்பது அறியத் தக்கது. கற்றுத் துறை போகிய பேரறிஞராகிய அடிகளால் மட்டுமே அந்நூல்கள் இயற்றப்படும் தகுதியுடையன.

அடிகள் வடமொழிப்புலமை பெற்று விளங்கியதோடு புராண நூல்கள் சிலவற்றையும் எழுதினர். இலக்கண நூல் மூன்றும், இலக்கிய நூல் பதினைந்தும், தருக்க நூல் ஒன்றும், சமயநூல் பத்தும், இவரால் இயற்றப்பெற்றன. அவற்றுள் சில மொழி பெயர்ப்பு நூல்களாகும்.

அவர்களிடம் மாணவர் பன்னிருவர் பயின்று சிறப்போடு விளங்கினார்கள். அவர்களிற் சிலர் தம் ஆசிரியரும் பாராட்டுமாறு நூல்களை யெழுதியுள்ளார்கள்.

பல்லாற்றானும் சமயத்தொண்டும், மொழித்தொண்டும் செய்து தமிழகத்தின் பெருமையை வளர்த்த மாதவச் சிவஞான முனிவரைப் போற்றுவதும், அவர் இயற்றிய நூல்களைப் படித்து அறிவு மேம்பாடு அடைதலும் தமிழ்மக்கள் அனைவரின் இன்றியமையாக் கடமை யாகும்.

———

# இயல்புடைய மூவர்

## [கழக இலக்கியச் செம்மல், புலவர் இரா. இளங்குமரன்]

'இயல்புடைய மூவர்' எவர் எனத் திட்டப்படுத்தப்படாமலே, 'மனம் போன போக்கெல்லாம்' உரைபோன திருவிளையாடலே காட்சி வழங்குகின்றது.

"இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை"

என்னும் குறளில் இம் மூவர் வருகின்றனர். வள்ளுவர் நாளில் 'முத்தமிழ்', 'மூவேந்தர்' என்பனபோல 'இயல்புடைய மூவரும்' தெளிவாக அறியப்பெற்றிருந்தனர். அதனால் 'மூவர்' என்ற எண்ணடியாகச் சுட்டி அமைந்தார்.

'இயல்புடைய மூவர்' தனிச் சிறப்பை இக் குறள் எப்படி வலியுறுத்துகிறது? இல்வாழ்வான் என்பான் துணை, இல்வாழ்வான் என்பான் நின்ற துணை, இல்வாழ்வான் என்பான் ஆற்றின் நின்ற துணை, இல்வாழ்வான் என்பான் நல்லாற்றின் நின்ற துணை, இல்வாழ்வான் என்பான் மூவர்க்கும் நல்லாற்றின் நின்ற துணை, இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும் நல்லாற்றின் நின்ற துணை என அறுமடி அழுத்தம் தரும் அடைமொழி கொண்டு வலியுறுத்துதல் அறிக.

பாயிர இயல் என்பதாம் நான்கு அதிகாரம் தாண்டி, நூலுள் முதல் இயல், முதல் அதிகார, முதல் குறளில் 'இயல்புடைய மூவர்' சுட்டப்பட்டுள்ளனர். அதனை அடுத்தே துறந்தாரும் துவ்வாரும் முதலாக வருபவர். அடுத்த குறளின் நிறைவிலேயே இல்வாழ்வானும்'தான்' வருகின்றான். இம்முறை நோக்கி இயல்புடைய மூவரைக் காணல் முறை.

'இல்வாழ்வான்' 'மூவர்' என்றவுடனே தமிழ்நெறியை அறவே மறந்து தொல்காப்பியம் திருக்குறள் தோன்றிய தமிழ் கூறு நல்லுலக வழக்கியலைத் துறந்து—எட்டாத வட்டத்திற்கு இட்டுக் கட்டி உரை கூறுவதே ஏற்றமெனப் பழைய உரையாசிரியன்மார் சென்றனர். பின்னை உரையாசிரியன்மாரும் அவர் வழியே வழியாகச் சென்றனர், அவ்வுரை ஏற்காதென மறுப்போரும் மயக்கறுக்க மாட்டாமல் பலப்பல கூறினர். மெய்யுரை கண்டாரும் நிலைநாட்ட வலுவற்று ஐயுற்றனர்! 'இயல்புடைய மூவர்' இயல்பு இவ்வாறு மிற்று!

'வேந்தன் சுற்றத்தார் துறவோர்' என்பதொரு புத்துரை.

'மாணவர் தொண்டர் அறிவர்' என்பதொரு புத்துரை.

'பார்ப்பனர் அரசர் வணிகர்' என்பதொரு புத்துரை.

'தாய் தந்தை மனையாள் எனலுமாம்' என்பதொரு புத்துரை.

'சைவர் வைணவர் வைதிகர்' என்பதொரு புத்துரை.

'ஊர் மன்றத்தார் மூவர்' என்பதொரு புத்துரை.

இவ்வாறே இன்னும் பலப்பல புத்துரைகள். பழைய உரைகளோ மூவரை, 'பிரமசாரி, வானப்பிரத்தன், சந்நியாசி' என்னும், இவருள் 'இயல்புடைய மூவரை' எவரெனலாம்?

மூவரைக் காண்டற்குச் சேக்கிழார் வழி காட்டுகிறார். வள்ளுவ வாக்கு வழியிலேயே வழிகாட்டுகிறார்! ஆதலால், எளிதாகப் பற்றிக்கொள்ள வாய்க்கின்றது. ஆனால் இருவரை மட்டுமே அவர் காட்டுகிறார்! இன்னொருவரைத் தேடிப் பிடிக்க வேண்டுமே! அதற்கு இளங்கோவடிகள் உதவுகின்றார். இவ்விருவர்க்கும் மேலாக வள்ளுவரே அழுத்தமாகத் தம் சொல்லாட்சியால் நிலைநாட்டி மெய்ப்பிக்கிறார், நூலாசிரியர் வழியிலேயே நூலுக்கு உரை காண்டலே சிக்கலற்றதும் செவ்விதானதும் ஆம்.

பெரியபுராணத்தில் அப்பூதியடிகள் புராணம் என்பதொன்று. அதிலுள்ள செய்தியே 'இயல்'பரண்!

அப்பூதியடிகளார் வளமனையில், நாவுக்கரசர் விருந்துண்ணத் தொடங்குமுன், தம் வழக்கப்படியே நீறணிந்து கொள்கின்றார். வளமனையார்க்கும் முறை முறையே நீறு நல்குகின்றார். எப்படி?

"இயல்புடைய இருவருக்கும் பொருந்திய நீறுநல்கி"

என்பது அத் தொடர் (31). அவ்வியல்புடைய இருவர் எவர்? தாய் தந்தையராம் இருவர். இருமுது குரவராம் இவரொழிய, இன்னொருவர் வேண்டுமே!

'இருமுது குரவர் ஏவலும் பிழைத்தேன்' என ஏங்கும் கோவலன், 'சிறுமுதுக் குறைவிக்குச் சிறுமையும் செய்தேன்' என நெக்குருகுகின்றானே! அடிகள் காட்டும் காட்சியில், இயல்புடைய மூவரைச் சுட்டியே வள்ளுவர் வழியில் 'அறவோர்க் களித்தல் அந்தணர் ஓம்பல் துறவோர்க்கு எதிர்தல் விருந்தெதிர் கோடல்' என்பவற்றை இழந்தமையைக் கோவலன் வாயிலாய்ச் சுட்டுகின்றாரே! இல்வாழ்க்கை முதல் முப்பாட்டும் ஒருப்பட்ட இடம் ஈதன்றோ!

"தாய் தந்தை மனைவி எனலுமாம்" என்றவரும் "அவர்கள் வாழ்க்கைத் துணையிலும் மக்கட் பேற்றிலும் பேசப்படுவர்" என்று

தாமே மறுத்தார். "அரசன் ஆசான் ஆன்றோர் என்றுமாம்" என்றும் உரைத்தார்.

"மூவரைத் தாய் தந்தை மனைவி என்றும், பெற்றோர் மனைவி மக்கள் என்றும் கொள்வதும் பொருத்தமாகத் தோன்றவில்லை. என்னை? பின்னே "தென்புலத்தார்......எனவரும் குறட்பாவில் "ஒக்கல்" இருத்தலான் என்க. ஒக்கலுள் பெற்றோர் முதலியோர் அடங்குதலை ஓர்க. ஒக்கலுக்கு வேறு பொருள் காண முயல்வது வீண்" என்று இக் கருத்தாளரை மறுத்தும் பிறர் வரைந்தனர்.

ஒக்கல் என்பது உறவினர். உற்றார் வேறு; உறவு வேறு. 'உற்றார் உறவினர்' என்னும் இணைமொழி இதனை மெய்ப்பிக்கும். தாய் தந்தை மனைவி மக்கள், உற்றார்; ஏனைக் கொண்டும் கொடுத்தும் தொடர்பானவர், உறவினர் என்க.

தாய் தந்தை மனைவி என்பாரே 'இயல்புடைய மூவர்' என்பது 'இயல்பு' அடையால் விளங்கும். பிறர் பிறரெல்லாம் இயல்பொடு செறிந்தார் அல்லர். இடை இடை தொடர்பும் விலக்கும் உடையரே!

எவ்வொருவரும், 'இவர்க்கு மகவாகப் பிறக்க வேண்டும்' எனத் திட்டப்படுத்திக்கொண்டு, அவ்வாறு பிறப்பது இல்லை; எவ்வொருவரையும் 'எமக்கு இவரே மகவாதல் வேண்டு'மெனப் பிறப்பிப்பதும் இல்லை! இயற்கை முறையிலேயே 'பெற்றோர்' அமைகின்றனர். கருத்தாங்கி உருத்தாங்கி திருத்தாங்க இயல்பாக வாய்க்கின்றனர். ஆகலின் அவர் இயல்புடைய இருவராம்!

இனி, மனைவி இயல்பாய் அமைபவளோ? திருமணம் மேலுலகிலேயே உறுதிப்படுத்தப்படுகின்றது. என்பது மறைமொழி. தமிழ்மொழியும், அதுவே: ஒன்றுவிக்கும் ஊழால் தலைவனும் தலைவியும் ஒன்றி உயர்ந்த பால தாணையால் தலைக் காதல் கொள்கின்றனர்; கணவன் மனைவி ஆகின்றனர் என்பது தொல்காப்பியம். (களவு. 2) பாலாவது ஊழ்.

தாய் தந்தை மனைவி என்பார் போல அன்பர், நண்பர், ஆசிரியர் மாணவர், அறிஞர் அரசர், தொண்டர் துறவர்—இல்வாழியின் குடிக்கு முற்றாக உறையும் இயல்புடையரோ? விரும்பின் செறியலாம்! வெறுப்பின் பிரியலாம்! பெற்றோர் பிள்ளையுரிமை, கணவன் மனைவி உரிமை—அத்தகையதோ? இறப்பினும் அகலா இயல் தொடர்பினர் அவரல்லரோ?

தன் வாழ்வைத் தந்தவர் இருவர்; தன் வாழ்க்கைத் துணையாய் வாய்த்தவர் ஒருவர்; இம் மூவர்க்கும் செய்வன செய்து நிறைவினைப் பெருக்கால் அவர் துணையால் இயல வேண்டிய இல்லறம் இனிது இயலுமோ? இல்லுறையும் இவர்கள் நல்லுதவியும் நல்லுரையும்

இல்லாக்கால் 'இல்லறம்' 'கொல்லறம்' ஆவதன்றி 'நல்லறம்' என்னவும் படுமோ? 'நாணுத் தகவுடைத்தே காணுங்காலே' என்பதாக வன்றோ அவ்வில்வாழ்வு அமைந்து 'பழிச் சுமை தாங்கி'யாய்ப் பளிச்சிடும்! 'இல்வாழ்வு' 'இல்—வாழ்வாக' அமைந்து விடலும் வியப்போ!

'இல்வாழ்வான் தன்னைப் பேணிக்கொள்ள வேண்டும்' என்னும் வள்ளுவர், அவனை முன்னேயே பேணிக்கொள்ள வேண்டும் என்னாராய், இறுதிக்கண் வைத்தார். பண்பாளர் முறை அதுவே! ஆனால், அன்னை தந்தை ஆட்டி ஆகியவரை அப்படிக் கடைசிக்குத் தள்ளல் ஆகாது; அஃது அறமன்று என்பாராய் முன் வரிசையிலே அவர்களைப் போற்றிக்கொள்ள வைத்தார் வள்ளுவர்.

குடும்பத்தில் இருந்தே குவலய நலப்பாடுகள் கொழிக்க வழி வகை கண்டவர் வள்ளுவர். ஆகலின், குடியினர்க்கு 'நல்லாற்றின் நின்ற துணை' என்றும் துறந்தார் முதலியவர்க்குத் 'துணை' என்றும், தென்புலத்தார் முதலியவரை 'ஓம்பல் தலை' என்றும் அவ்வவர் நிலை விளங்கச் சொல்லாட்சி செய்தார்.

தமிழறம், இல்லறம் துறவறம் என இரண்டே. அவற்றுள் துறவறத்தாரை அடுத்த குறளில் கூறுதலால் இக் குறளில் கூறுபவர் இல்லறத்தாரே! அவரும் தந்தை, தாய், மனைவியாய மூவரே! இவரே இயல்புடையார்! பிறர் பிறர் அயலுடையர் என்க.

---

## தனித்தமிழ்ப் பெயராளிகளுக்கு ஒரு வேண்டுகை

பேரன்பீர்,

தனித்தமிழ் ஆய்வாளர்க்குக் கருவி நூலாம் வகையில் தனித் தமிழ்ப் பெயராளிகளின் பட்டியல் தொகுத்து நூலுருவாக்க விரும்புகின்றேன். அவ் விருப்பு நிறைவேறும் வகையில் தங்கள் துணையும் தூண்டலும் வேண்டுமெனக் கோருகின்றேன். தங்கள் குறிப்புடன், தாங்கள் தெளிவாக அறிந்த தனிததமிழ்ப் பெயராளிகளின் குறிப்பும் விடுக்கலாம். ஆனால் படிவம் தனித்தனியே இருத்தல் வேண்டும். அமைப்புப் படிவம்:

1. தனித்தமிழ்ப் பெயர், 2. முந்தைப் பெயர், 3. பெயர் மாற்றக் கரணிய விளக்கம், 4. கல்வி, 5. பணி, 6, முகவரி (அஞ்சல் எண்ணுடன்)

தகவல் தரவேண்டிய முகவரி:

புலவர் இரா. இளங்குமரன்
பாவாணர் ஆராய்ச்சி நூலகம்,
திருநகர், மதுரை—625 006.

# எண்மர் எண்மணி மாலை

[மருத்துவர் மறையரசன்]

(முன் இதழ் ௯௨௬ ஆம் பக்கத் தொடர்ச்சி)

## 10.1. வீரமாமுனிவர் :

(வெண்பா)

தீந்தமிழும் தூய கிறித்துவமும் வாழவைத்த
வேந்தனே வீரமா நல்முனிவ—ஏந்தலேநான்
செய்யும் மணிமாலை சேர்ந்தேன் புகழ்வாழ்வைக்
கொய்யும் வழியிதெனும் கூற்று.

## 10.2. பரிதிமாற் கலைஞர் :

(அகவல்)

கூற்றமாய்த் தமிழ்ப்பகை கொன்றழித் திடுவோன்
ஏற்றமாய்ப் பாவலர் விருந்துந் தருவோன்
முப்பிரி நூற்கு முழுத்தகு தியைப்பெறும்
ஒப்பறி யாப்புகழ் அந்தணன் அவனின்
நாடக நூல்கள் மூன்றும் படிக்கவும்
ஆடவும் ஏற்ற அருந்தமிழ் நூல்கள்
துடிப்புடை மதிவா ணனுமே
வெடிப்புற எழுந்த உரைநடை நூலே !

## 10.3. மறைமலையடிகள் :

(கட்டளைக் கலித்துறை)

நூலாய் நிறைத்தனை நூறா யிரமாகி நூலகத்தில்
மேலாய்ச் சிவநெறி ஏற்று வருமெவ் வெதிர்ப்புரையும்
ஏலாய் மறுப்புரை இணையாய்க் கொடுத்தா யெதிரடிக்கைக்
கோலாய் தமிழினைக் கொண்டீர் திறமை குளிர்தருமே !

## 10.4. பாவேந்தர் :

(வஞ்சி விருத்தம்)

குளிர்சோலையே மலரோடையே
குருவாயுனை ஏற்றுல்

களிர்மேவிட நடுக்கோடொரு
பகையோடிடும் தோற்றே
தளிர்மேவிட புதிதாகுமே
தமிழேநனி சிறப்பே
துளிர் மேவிடும் இனியோங்கிடும்
துரையேயிதில் மறுப்போ ?

10.5. பாவாணர் :

(எண்சீர் ஆசிரிய விருத்தம்)

மறுப்புரைக்க வல்லவனும் மதர்த்த யானை
மருப்புகட்டில் தமிழேற்றும் மேன்மைத் தேவன்
பொறுப்போடு வேரடியும் வினையும் ஆய்ந்து
புதுக்குருதி ஏற்றுகின்ற தமிழ நேயன்
கருத்துரையும் நிறைவாகத் தந்தே ஏற்கக்
கனிந்துரைக்கும் பாவாணர் வழியை விட்டால்
குருத்துவிடும் தனித்தமிழும் கருகிச் சாயும்
கொள்கைத்தேர் அனைத்திற்கும் அவனே அச்சு.

10.6. வ. சுப்பையா (பிள்ளை) :

(மருட்பா)

அச்சும் பதிப்பும் அரும்பணி யாயப்பர்
அச்சகம் கண்டிடு மையனே—அச்சமற்று
சைவமுந் தமிழும் வளர்த்திடு மலையெம்
செய்தவப் பேறு(உ)ன் புகழ்முன்
மெய்தவ முனிவரும் மிகச்சிறு மடுவே!

10.7. பண்ணாய்வாளர் :

(சிந்து)

மடுவில் கிடந்த இசையில் நீங்கும்
வடுவினி எனப் பறந்தேன்—பழங்
கொடுமையெ லாம் மறந்தேன்

சூரியன் வந்திடக் காரிருள் போமெனக்
கூறிக்கை கொட்டுகின்றேன்—எழுந்திடப்
பாரில்வான் முட்டுகின்றேன்

சுந்தரன் ஆய்ந்திட வந்த தொளியென
தந்தனம் பாடுகின்றேன்—தாலச்
சந்தமோ டாடுகின்றேன்

பூத்தது வாழ்வென மாத்தமிழ் ஏந்தியே
கூத்திடு வோமணைந்தே - தமிழிசை
காத்திடு வோமிணைந்தே !

## 10.8. பாவல ரேறு :

(கலி வெண்பா)

இணைந்த மணிமாலை எண்மர் புகழை
நினைந்து வழிநடப்போம் ஆயின்—தனிமாந்தப்

பண்பை நினைத்துப் பகையை வளர்க்காமல்
அன்பாய்த் துரும்பேனும் செய்திருந்தால்—என்பதுவும்

ஈந்தார் எனப்புகழ்வோம் என்றும் அவர்பெயரை
ஏந்தி மகிழ்ந்திடுவோம் எந்தமிழ்ப்பா—வேந்தனது

முன்னர்த் தமிழ்வளர்த்த மேன்மை மறைமலையும்
கன்னற் தமிழாய்ந்த கற்கண்டு—தன்னலத்தைப்

பேணாத பாவாணர் போனதன்பின் நம்மிடையே
தூணாய் நிற்பவர்கள் தூயதமிழ்—நாணலே

செந்தமிழை வாழ்இனத்தைச் சீர்தூக்க வந்திருக்கும்
சந்தக் கிழவர்களைச் சார்ந்திடுவோம்—நொந்துநொந்து

மால்கொண்டு வாய்புலம்பும் வாழ்வை வெறுத்துளம்
வேல்கொண்டு வெம்பகையை ஓட்டிடுவோம்—தோள்கொண்டு

பாவலரின் ஏறும் வருகின்றார் அன்னவர்போல்
காவலர்கள் பன்னூறு காண்கின்றோம்—ஆவலுடன்

அன்னவர்கள் பின்பற்றி அன்னைத் தமிழ்வளர்க்க
முன்வருவோம் ; 'வேற்று மொழிகளைந்து—இன்னமுதாய்

ஏற்றுச் சுவைத்திடுவோம் இந்தமிழை ;' என்னுமிக்
கூற்றை உளம்முழுதுங் கொண்டு.

முற்றும்.

# பண்டைய வேதமும் பைந்தமிழ் ஞானமும்

[பேராசிரியர் மா. சண்முகசுப்பிரமணியம்]

"வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத"
(பெரியபுராணம்)

என்று திருஞான சம்பந்தரைப் போற்றிப் பாடி, அவர் வரலாற்றைத் தொடங்குகிறார் சேக்கிழார், தமது பெரியபுராணத்தில்.

இங்கு "வேத நெறி" என்பது "இறைமை நெறி" என்ற பொருளில் வருவதாகும். வேதங்கள் என்று கூறப்படும் நூல்களில் உள்ள நெறி என்று நாம் பொருள் கண்டால் அது தவறாகிவிடும்.

நம்மாழ்வாரைப் போற்றும் நாதமுனிகள்,

"வேதம் தமிழ்செய்த மாறன் சடகோபன்"

என்று ஏத்துகின்றார். "இறைமை ஞானத்தை இன்தமிழில் அருளிய சடகோபர்", என்பதே இதற்குப் பொருளாகும். இல்லாவிடில், நம்மாழ்வாரின் அருளிச்செயல்கள் வேதங்களின் மொழி பெயர்ப்பு என்று எண்ணுவதற்கு இடமேற்பட்டு விடும்.

சம்பந்தப் பெருமானின் திரு அவதாரப் பயனால் தென்னாட்டின் பெருமை உயர்ந்தது, செழுந்தமிழ் நெறி அயல் மொழி நெறிகளை வென்றது என்பதைத் தெளிவாகப் பாடியுள்ளார் சேக்கிழார் :

"திசையனைத்தின் பெருமை எலாம் தென்றிசையே வென்றேற
மிசையுலகும் பிறவுலகும் மேதினியே தனிவெல்ல
அசைவில்செழுந்தமிழ் வழக்கே அயல்வழக்கின் துறைவெல்ல
இசைமுழுதும் மெய்யறிவும் இடம்கொள்ளும் நிலைபெருக".
(பெரியபுராணம்)

அடியார்கள் அருளிய இறைமை ஞானத்தால், தென்னாட்டின் பெருமை உயர்ந்தது, செந்தமிழ் நெறி அயல்மொழி நெறிகளை வென்றது என்ற நிலையில், செந்தமிழ் நெறி பிறமொழி நெறியில் பிறந்தது என்று கூறினால் அது பொருந்தாத தொன்றாகும்.

ஆயினும், தேவாரம், திருவாசகம் திவ்யப் பிரபந்தம் ஆகிய அருட்பாடல்கள் கூறும் இறைமை ஞானம் வடமொழியிலுள்ள வேதங்களில் கூறப்பட்டதுதான் என்றும், இவை விரித்துரைக்கும் ''பக்தி நெறி'' வேதங்களில் கூறப்படும் நெறியே என்றும் பலரும் நம்புகின்றனர்.

நீண்ட நாட்களாக நிலவிவரும் இந்த நம்பிக்கை ஆய்வுக்கு அப்பாற்பட்ட உண்மையாக இன்றும் கருதப்படுகிறது!

இந்த நம்பிக்கை உண்மையின் அடிப்படையில் உள்ளதா என்பதுபற்றிச் சிந்திக்காததால் நாம் இழந்த நலன்கள் பல! விளைந்த கேடுகள் பல!

இறைமை ஞானத்தை இன்தமிழில் கூறும் முதல் நூல்களை யெல்லாம் மொழி பெயர்ப்பு நூல்கள் எனக் கொண்டோம்!

ஞானிகளுக்கெல்லாம் ஞானிகளான மெய்யடியார்களின் மேன்மையினை உள்ளவாறு உணரத் தவறிவிட்டோம்!

சமயம் வளர்த்த தமிழின் சால்பினைத் தெரியாமல், தமிழ் வளர்த்த சமயத்தின் தகைமையினைப் புரியாமல் தாழ்ந்துவிட்டோம்!

தமிழர் சமயம் எது என்று உணர்ந்தோம் இல்லை! தமிழ் நெறியை உணர்ந்து நாம் உய்ந்தோம் இல்லை!

* * * *

இனி, வடமொழியில் ''வேதங்கள்'' என்று குறிக்கப்படும் பொருள்பற்றி நாம் சிறிது சிந்திக்கலாம்.

## ''வேதம்'' என்பது என்ன?

''மொழி'' என்பது முதலில் பேசப்பட்டு, பிறகுதான் எழுத்து வடிவம் பெறுகிறது. வடமொழிவாணர்கள் பேச மட்டுமே தெரிந்திருந்த காலத்தில் எழுந்த வழிபாட்டு வசனங்களைச் ''சுருதி'' என்று அழைத்தனர். ''சுருதி'' என்றால் ''கேட்கப்படுவது'' என்று பொருள்.

சுருதி நிலவிய காலம் அவர்களிடையே நாகரிகம் வளர்ச்சி யுறாத காலம். இடி, மின்னல், காற்று, மழை போன்ற இயற்கையின் இயக்கங்களையும், சூரியன் சந்திரன் போன்ற இயற்கைப் பொருள்களையும் கண்டு அவர்கள் அஞ்சி வாழ்ந்த காலம். இந்த அச்சத்தில் பிறந்ததுதான் ஆரம்பகால வழிபாடு என்பார்கள் மானிட

இயல் வல்லுநர்கள். இந் நிலையில், வாயுவும் வருணனும், நீரும் நெருப்பும் அவர்களின் வழிபடு தெய்வங்கள் ஆயின. ''எங்களைக் காப்பாற்று'', ''எங்கள் கால்நடைகளைக் காப்பாற்று'' என்ற வேண்டுகோள்களாகவே அவர்கள் வழிபாடு அமைந்தது. தெய் வங்கள் இவர்களைக் காப்பது என்றால், இவர்களும் தெய்வங்களைத் திருப்தி செய்யும் வகையில் ஏதாவது திருப்பிச் செய்ய வேண்டுமே? எனவே, இவர்கள் யாகங்கள் செய்தார்கள். ஆடு, மாடு போன்ற உயிரினங்களைத் தெய்வங்களுக்குப் பலி கொடுத்தார்கள்! இத்தகைய யாகங்களில் தெங்வங்களுக்குக் கூறப்படும் உபசார உரைகளைத் தான் ''மந்திரங்கள்'' என்பார்கள். இம் மந்திரங்களின் தொகுப் பினை ''சம்ஹிதை'' என்று குறிப்பிட்டனர். இந்த சம்ஹிதைகளைக் கொண்டவைதாம் ரிக், யஜுர், சாம, அதர்வ வேதங்கள். இவை ''சுருதிகள்'' என்ற பெயரால் அழைக்கப்பட்டன.

இவ் வேதங்களில் மெய்ஞ்ஞானத் தத்துவங்களைக் காண்பது அரிது. யாகச் சடங்குகளும் மந்திரங்களுமே அவற்றில் மலிந் துள்ளன.

இதற்கு மிகப் பிற்காலத்தில் மெய்ஞ்ஞானத் தத்துவங்களைக் கூறும் நூல்கள் தோன்றின. இவற்றை ''உபநிடதங்கள்'' என் பார்கள். ''உபநிடதம்'' என்றால் ''அருகில் அமர்தல்'' என்று பொருள். குருவின் அருகில் சீடன் அமர்ந்து இறைமை ஞானத் தைச் செவி மடுக்கும் காட்சியைக் கண்முன் நிறுத்தும் வகையில் ''உபநிடதம்'' என்ற சொல்லாட்சி உள்ளது. ''இறைமை ஞானம்'' என்பதே இதற்குப் பொருள் என்று ஆதி சங்கரர் கூறுகின்றார்.

நூற்று எட்டு உபநிடதங்கள் இருந்தன என்று கூறப்படு கிறது. இப்பொழுது பதினாறு உபநிடதங்களே பெரும்பாலும் பயிலப்படுகின்றன. இவை வெவ்வேறு காலங்களில் எழுதப் பட்டவை. ஆயினும் எழுதியோர் யார் என்பது தெரியவில்லை. அந்தணர்களைவிட அரசர்களே பெரும்பாலான உபநிடதங்களை எழுதியிருப்பதாக ஊகிக்கப்படுகிறது.

மாக்ஸ் முல்லர் (Max Muller) போன்ற மேலை நாட்டு அறிஞர்கள் உபநிடதங்கள் கூறும் மெய்ஞ்ஞானத்தைப் படித்துத் தான் பாரத நாட்டின் ஆன்மீக வளர்ச்சிநிலையை மதிப்பிட்டு மலைத்து நின்றனர். ஆனால், உபநிடதங்கள் வேத காலத்திற்கு மிக மிகப் பின்னால் தோன்றியவை என்ற உண்மையினை நாம் நினைவிற் கொள்ள வேண்டும்.

பின்னால் வந்த சமயப் புலவர்கள் உபநிடதங்களையும் வேதத்தின் ஒரு பகுதியாகக் கொண்டு, உபநிடதங்களை ''வேதாந்தம்'' என்று

அழைத்தனர். மேலும், யாகச் சடங்குகளையும் (கருமங்களையும்) அவற்றுக்கான மந்திரங்களையும் கொண்ட சுருதியை, அஃதாவது, வேதத்தை ''கர்ம காண்டம்'' என்றும், உபநிடதங்களை ''ஞான காண்டம்'' என்றும் பிரித்துக் கூறி வேதத்தைக் காட்டிலும் உப நிடதங்கள் மேலானவை என்று குறிப்பிட்டனர்.

இதுதான் ''வேதம்'', ''வேதம்'' என்று குறிக்கப்படும் பொருளின் வரலாற்று உண்மையாகும்.

**பாரதியார் பகரும் உண்மை:**

இதோ, வடமொழியில் வளமான புலமை பெற்றிருந்த மகா கவி சுப்பிரமணிய பாரதியார் இதைப்பற்றிக் கூறுகின்றார்:

''......உபநிஷத்துக்கள் வேதத்தின் பிற்சேர்க்கைகள். இவை வேதாந்தம் என்ற பெயர் படைத்தன; அதாவது வேதத்தின் நிச்சயம். இவை வேத ரிஷிகளால் சமைக்கப்பட்டனவல்ல. பிற்காலத்தவர்களால் சமைக்கப்பட்டன. சம்ஹிதைகள் என்று மந்திரங்கள் சொல்லப்படுவனவே உண்மையான வேதங்கள். அவையே ஹிந்து மதத்தின் வேர். அவையே வசிஷ்ட வாம தேவாதி தேவ ரிஷிகளின் கொள்கைகளைக் காட்டுவன. உப நிஷத்துக்கள் மந்திரங்களுக்கு விரோதமல்ல; அவற்றுக்குச் சாஸ்திர முடிபு. அவற்றின் சிரோபூஷணம். ஆனால், பச்சை வேதமென்பது மந்திரம் அல்லது சம்ஹிதை எனப்படும் பகுதியேயாம்.

''......சம்ஸ்கிருத பாஷையிலுள்ள மற்றெல்லா நூல்களும் ஒரு பாஷை; வேதம் மாத்திரம்—அதாவது, சம்ஹிதை அல்லது மந்திரம் மாத்திரம்—தனியான பாஷையாக இருக்கிறது. இஃதொரு பெரு வியப்பு அன்றோ? வேத சம்ஸ்கிருதம் வேறெந்த நூலிலும் கிடையாது. உபநிஷத்தில் ஒரு சில, மிகச் சில பகுதிகளில், விசேஷமாக வேத மந்திரங்களை மீட்டு முரைக்குமிடத்தே, வேத பாஷையைக் காணலாம். மற்றப்படி உபநிஷத்து முழுதும் பிற்காலத்துப் பாஷையிலேயே சமைந்திருக்கிறது.

''இங்ஙனமிருகக, பிற்காலத்து ஆசாரியார்களிலே சிலர் வேதத்தைக் 'கர்ம காண்டம்' எனறும், அதனால் தாழ்ந்த படியைச் சேர்ந்தது என்றும், உபநிஷத்தே 'ஞான காண்டம்' என்றும், ஆதலால் அது வேதத்தைக் காட்டிலும் உயர்ந்தது என்றும் கருதுவாராயினர்.

''இங்ஙனம் பிற்காலத்து ஆசாரியர்கள் நினைப்பதற்கு உண்டான காரணங்கள் பல. அவற்றுட் சிலவற்றை இங்கே தருகிறேன். முதலாவது காரணம், வேத பாஷை மிகவும் பழமைப்பட்டுப்போனபடியால் அதன் உண்மையான பொருளைக் கண்டுபிடித்தல் மிகவும் துர்லபமாய் விட்டது............வேத மந்திரங்களுக்குச் சரியான அர்த்தம் கண்டுபிடிக்க வேண்டுமென்று தற்காலத்தில் ஐரோப்பாவிலும் இந்தியாவிலும் அநேக பண்டிதர்கள் மிகவும் சிரமப்படுகிறார்கள்.......''

தாம் தமிழில் மொழிபெயர்த்துள்ள ''பகவத் கீதையின்'' முன்னுரையில் மகாகவி பாரதியார் மேற்கண்டவாறு கூறியுள்ளார்.

யஜுர் வேதத்திலிருந்து சில வரிகள் :

காலஞ் சென்ற பண்டிதர் M. R. சம்புநாதர் என்ற பெரியவர் நான்கு வேதங்களையும் தமிழில் மொழிபெயர்த்துள்ளார். அவை அச்சாகிப் புத்தகங்களாக உள்ளன. அவற்றை நாம் படிக்க முற்பட்டால், எவ்வாறு சம்ஹிதைகள் புரிந்துகொள்ள முடியாதவை என்பதையும் அவற்றிலே இறைமை ஞானம் மிகமிக அரிதாகவே உள்ளது என்பதையும் எளிதில் கண்டுகொள்ளலாம்.

அன்னாரது யஜுர் வேத மொழிபெயர்ப்பு நூலில் இருந்து எடுக்கப்பெற்ற சில பகுதிகளைக் கீழே காணலாம்.

அந்த நாட்களில் வடமொழியாளர்கள் அக்கினியைத்தான் முக்கியமாக வழிபட்டார்கள். காட்டு விலங்குகளை விரட்டுவதற்கும் இருளில் ஒளிதருவதற்கும் பயன்பட்ட அக்கினி அவர்களின் இஷ்ட தெய்வமாக இருந்தது.

''அக்கினியே! எங்கள் நெருங்கிய நண்பனான நீ இப்பொழுது இக்காலை உதயமாகுங்கால் எங்கள் அருகில் இருக்கவும்.'' (அநுவாகம் 387-4)

''அக்கினியே! உன்னை அணுகுபவன் இம்சையற்றவனாக இருக்க வேண்டும். உனது பிராமணர்கள் பெருமையுடனாக வேண்டும். அந்நியர்கள் ஒங்க வேண்டாம்.''

(அநுவாகம் 180-2)

''ருத்திரனே! துதியாகும் நீ, நாடுபவனுக்குச் சுகமளிக்கவும். உன் ஆயுதங்கள் எங்களைத் தவிர அந்நியர்களை அழிக்கட்டும். (அநுவாகம் 230-8)

''காற்றுக்கு சுவாஹா ! ஆவிக்கு சுவாஹா ! நீராவிக்கு சுவாஹா ! மேகத்துக்கு சுவாஹா ! மின்னல் மேகத்திற்கு சுவாஹா ! இடி முழக்க மேகத்திற்கு சுவாஹா ! மழைக்கு சுவாஹா ! நிற்கும் மழைக்கு சுவாஹா ! தெளிக்கும் மழைக்கு சுவாஹா ! மழைத் துளிகளுக்கு சுவாஹா ! இடிமுழக்கங் களுக்கு சுவாஹா ! மூடு பனிக்கு சுவாஹா !''

(அநுவாகம் 388-13)

''ஒன்றுக்கு சுவாஹா ! மூன்றுக்கு சுவாஹா ! ஐந்துக்கு சுவாஹா ! ஏழுக்கு சுவாஹா ! ஒன்பதுக்கு சுவாஹா !...... தொண்ணூற்றென்பதுக்கு சுவாஹா ! நூறுக்கு சுவாஹா ! சகலத்திற்கும் சுவாஹா !'' (அநுவாகம் 328)

(பண்டிதர் ஜம்புநாதரின் யஜுர் வேத மொழி பெயர்ப்பிலிருந்து)

இவ்வாறுன யாக மந்திரங்களையும் வேண்டுதல்களையுமே யஜுர் வேதம் என்ற சுருதியில் பரவலாகக் காண்கின்றோம் !

எனவே, வடமொழி வேதங்களில் கூறப்படும் இறைமை நெறி என்பது, யாகச் சடங்குகளும் அவற்றுக்கான மந்திரங்களுமே ஆகும். இந்நெறியினை ஏற்று அடியார்கள் எங்குமே பாடவில்லை.

**புரியாத ஒன்றைத் தெரியாத நிலை :**

உண்மை இவ்வாறு இருக்க, மெய்யடியார்களின் அருட் பாடல்களை வேதத்தின் (சுருதியின்) மொழி பெயர்ப்பு என்றோ வேத நெறியே அவர்கள் அருளியுள்ள நெறி என்றோ கூறுவது பொருந் தாத தொன்றாகும் என்பதில் ஐயமில்லை.

''எல்லாம் வேதத்தில் உள்ளது'', என்று கூறப்பட்டதன் காரணத்தைச் சிறிது சிந்தித்தால் நாம் புரிந்துகொள்ளலாம்.

ஆன்மீக ஞானத்தைக் கற்போர் என்று சமுதாயத்தில் ஒரு பகுதியினரை மட்டுமே உயர்வாக ஒதுக்கி வைக்கப்பட்ட அமைப்பில், அவர்கள் கூறுவதைப் பிறர் அப்படியே ஏற்றுக்கொள்ள வேண்டிய நிலை எழுந்தது. அந்த வேதியர்களுக்கு மட்டுமே தெரிந்த, ஆனால், வேறு எவருக்கும் தெரியாத மொழியாக வடமொழி இருந்தது. அந்த மொழியில் எல்லாமே உள்ளது என்ற வேதியரின் கூற்றை எவரும் மறுப்பதற்கில்லை. புரியாத ஒன்றைத் தெரியாத நிலையில் மறுப்பதற்கு வழியேது?

எனவே, தமிழில் உள்ள மெய்ஞ்ஞான நூல்கள் அனைத்தும் சார்பு நூல்கள்தாம், அவற்றிற்கு மூலமாக உள்ளது வேதமே

யாகும், என்று வேதியர்கள் சாற்றியது அன்று உண்மை எனக் கொள்ளப்பட்டது !

ஆனால், அக் கூற்று இன்றும் உண்மை எனக் கருதப்படுவது தான் விந்தையிலும் விந்தையாகும் !

நான்மறைகளை மட்டுமே போற்றும் வேதியர்கள், பிற மொழியில் உள்ள மெய்ஞ்ஞானத்தைப் புன்மையாகக் கருதினார்கள் என்பதை மதுரகவியாழ்வாரே பாடியுள்ளார் :

> "நன்மையால் மிக்க நான்மறை யாளர்கள்
> புன்மையாகக் கருதுவ ராதலின்
> அன்னையாய் அத்தனாய் என்னை ஆண்டிடும்
> தன்மையான் சடகோபன் என் நம்பியே". (பாடல் 4)

"நான்மறையாளர்கள் என்னைப் புன்மையாகக் கருதினாலும், மெய்ஞ்ஞானியான சடகோபரை என் அன்னையாகவும் அத்தனாக வும் கொண்டு உய்ந்தேன்", என்கிறார் அந்தணர் குலத்துதித்த மதுரகவியார் !

இதிலிருந்து தெரிவது என்ன ?

சுருதிகளை ஓதும் வேதியர்கள் வடமொழியிலுள்ள நான்மறை களில்தான் இறைமை ஞானம் அடங்கியுள்ளது, பிற ஞானிகள் கூறுவதெல்லாம் அந்த வேதஞானம்தான் என்று பறைசாற்றி வந்தனர். ஓதும் மறைகள் இல்லையேல் உயர்ந்த மெய்ஞ்ஞானம் இல்லை என்று ஆதாரம் ஏதும் இன்றியே அவர்கள் கூறி வந்தனர்.

ஆனால், அடியார்களும் ஆழ்வார்களும் இக் கூற்றை ஏற்றுக் கொள்ளவில்லை. இறைவனின் புகழ் பாடும் மறைகளை அவர்கள் மதித்தாலும், இறைவனை எய்துவதற்கு ஏற்ற நெறியாக நான்மறைச் சடங்குகளை அவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை.

எனவே, பண்டைய வேதங்களிலிருந்து பிறந்தது அன்று பைந்தமிழ் பகரும் இறைமை ஞானம், என்ற உண்மையினை நாம் உறுதியாக உணர வேண்டும்.

இனி, நான்மறைகளுக்கும் அப்பாற்பட்டவன் இறைவன் என் பதையும், நான்மறைகளைக் கொண்டு எவரும் இறைவனை எய்து தல் இயலாது என்பதையும் மெய்யடியார்கள் எவ்வளவு திட்பமாகக் கூறியுள்ளனர் என்பதைக் காண்போம்.

(தொடரும்)

# குறிஞ்சிப்பாட்டில் வரும் செடிகொடி மரப்பெயர்கள்

[பி. எல். சாமி, இ. ஆ. ப. (ஓய்வு)]

[முன் இதழ் ௬௬௨ ஆம் பக்கத் தொடர்ச்சி]

தில்லை கடற்கரையோரத்தில் சதுப்பு நிலத்தில் காணப்படுவது. நற்றிணையில் தில்லைமரம் தலையில் கற்றை முடி சூடிய முனிவருக்கு ஒப்பிடப்பட்டுள்ளது. இதன் நெடுங்குத்தாக வளரும் கிளைகளையே அவ்வாறு ஒப்பிட்டுள்ளனர் என்று தெரிகின்றது. இதை அறிவியலில் Excoecaria Agallocha என்றழைப்பர்.

பாலை மரம் பாலைத்திணைக்குப் பெயராகியது. பாலைமரம் எது வென்று கண்டுகொள்ள அதன் உலர்கனியின் வர்ணனை உதவு கின்றது. நற்றிணையில் (107) 'கொடிறுபோல் காய வாலிணர்ப் பாலை' என்று கூறப்பட்டிருப்பதைக் கவனிக்கவேண்டும். பாலை மரத்தில் காய் பற்றுக்குறடு போலிருப்பதாகக் கூறுவதைக் கவனிக்க வேண்டும். பற்றுக்குறடு இரண்டு பிரிவாக நீண்டு ஈயம் பூசுங்கால் சேர்வது போலவே பாலைமரத்தின் காயும் இரண்டாகப் பிரிந்து நுனியில் சேர்ந்து காணப்படும். இந்த உவமையிலிருந்து பாலைமரம் எதுவென்று கண்டுகொள்ள முடிகின்றது. இந்த மரத்தையே பிற் காலத்தில் பாலைநிலம் என்றும் நிலப்பாலை என்றும் அழைத்தனர். பாலைமரத்தை அறிவியலில் Wrightia tinctorea என்றழைப்பர். இதைத் தந்தப் பாலை என்று அழைப்பதுமுண்டு. இந்தப் பாலைமரத் தைக் குடசப்பாலையோடு இணைத்து மயங்கிவிடுவதுண்டு. ஆனால் குடசப்பாலை வேறு ஒருவகைப் பாலைமரத்தைக் குறிக்கும். பாலை என்ற பெயர் இந்த மரத்தில் வெளிவரும் பாலின் அடிப்படையாகத் தோன்றியதாகும். வெட்பாலை, குடசப்பாலை, சதுரப்பாலை, ஆயப் பாலை என்ற மரங்கள் எல்லாம் பாலுடையவை. இந்தப் பாலைப் பெயரை மொழிபெயர்த்தாற் போன்று வடநாட்டு மொழிகளில் இந்தப் பாலை மரங்களுக்குப் பெயர்கள் இன்றும் காணப்படுகின்றன.

முல்லை யாவருக்கும் தெரிந்த செடியாகும். முல்லைக்கொடியைக் குறிஞ்சிப் பாட்டு கூறியுள்ளது. முல்லையை அறிவியலில் Jasminium auriculatum என்றழைப்பர்.

குல்லை என்பது கஞ்சாச் செடியாகும். உரையாசிரியர்கள் கஞ்சங்குல்லை என்றழைப்பர். இந்தச் செடி ஒருவகைப் பாலைத் தரு

கின்றது. அதிலிருந்து கஞ்சா செய்யப்படுகின்றது. சங்க நூல்களில் இச் செடியின் மணமே கூறப்பட்டுள்ளது. இதிலிருந்து எடுக்கும் போதைப்பொருள் கூறப்படவில்லை. இதை அறிவியலில் Cannabis sativa என்றழைப்பர்.

பிடவத்தின் பூ நல்ல நறுமணமுடையது என்று கூறப்பட்டுள்ளது. இதன் நறுமணத்தைத் தொலையிலேயே உணரலாம், (அகம் : 23, முல்லைப்பாட்டு வரி 25) என்பர். தமிழகத்தில் சில இடங்களில் புடன் என்று பிடா அழைக்கப்படுகின்றது. இதைக் குட்டிப்பிடவம் என்றும் கூறுவர். இதை அறிவியலில் Randia malabarica என்றழைப்பர். இதை முள்ளுடையதாகவும் வெண்மையான தளிருடையதாகவும், மழைக்காலத்தில் பூப்பதாகவும் சங்கப் பாடல்கள் (அகம். 34, 344, கலி. 101) கூறும்.

சிறுமரோடம் என்று ஒரு மரம் கூறப்பட்டுள்ளது. இது நிகண்டுகளில் செங்கருங்காலி என்றழைக்கப்பட்டுள்ளது. இது சிறிய மரமாயினும் உறுதியான வைரம் பாய்ந்த மரமாகும். இதன் 'அகக் காழ்' பயனுடையது. இதன் கருஞ் சிவப்பான வைரமரத்தை நீரில் காய்ச்சினால் கத்தைக்காம்பு என்ற வெற்றிலைபாக்கு போடுவதற்கு உதவும் பொருள் கிடைக்கின்றது. இதன் உள்மரம் உலக்கை முதலிய பொருள்களைச் செய்ய உதவும். இதன் அறிவியல் பெயர் Acacia Sundra என்பதாகும்.

குறிஞ்சிப்பாட்டு கூறும் வாழை தானாகவே மலைகளில் வளர்வதாகும். இது பயிராக்கப்பட்டதன்று. இதை அறிவியலில் Misa superba என்றழைப்பர்.

வள்ளி ஒரு கொடியாகும். இக்காலத்தில் ஆள்வள்ளி, காய் வள்ளி என்றழைப்பர். இதன் கிழங்கை உணவாக உண்பர். இது Dioscoreae என்ற குடும்பத்தைச் சார்ந்ததாகும். இதை வளர்ப்பதுமுண்டு.

நெய்தல் என்பது நீரில் வாழும் கொடியாகும். குறிஞ்சிப் பாட்டில் இதன் பூ பெரியதென்றும், நறுமணமிக்கதென்றும் கூறப்பட்டுள்ளது. நெய்தலின் பூ சிறிது வெண்மை கலந்த நீலநிறமாக இருக்கும். சங்கநூல்களில் பெரியதும் சிறியதுமான பூக்களை உடைய இருவகை நெய்தற்கொடிகள் கூறப்பட்டுள்ளன. இது அறிவியலில் Nymphaea stellata என்றழைக்கப்படும்.

குறிஞ்சிப்பாட்டில் தாழை என்பது தென்னையின் பாளையைக் குறிப்பிடுகின்றது. ஆனால் சங்க நூல்களில் தாழை தென்னையைக் குறிக்கவில்லை. தாழை செடியையே குறிக்கின்றது. பழஞ் சங்க

நூல்களான அகநானூறு, ஐங்குறுநூறு, நற்றிணை முதலியவைகளில் தென்னைமரம் குறிப்பிடப்படவில்லை. ஆனால் குறிஞ்சிப்பாட்டில் பின்னர் தாழையைக் கைதை என்று சொல்லியிருப்பதால் நச்சினார்க்கினியர் தாழை என்பது தென்னை என்று இங்குக் கூறியது பொருத்தமே. சிலப்பதிகாரமும் 'வீழில்தாழை' என்று தென்னை மரத்தைக் குறிப்பிடுகின்றது. விழுது இல்லாத தாழை என்பது இது சார்பாக கவனிக்கத்தக்கது. தென்னைமரத்தை அறிவியலில் Cocos nucifera என்றழைப்பர்.

தவளம் என்பது சிவந்த முல்லை என்று கூறுவர். முல்லையில் இஃது ஒருவகை. இது Jasminium Rubescens என்றழைப்பர். இந்த வகை முல்லை மொக்குக்கு அடிப்பாகம் சிவந்து இருக்கும். இது கல்கத்தாவில் Kund Jooee என்ற பெயரில் பெரிதும் பயன் படுத்தப்படுகிறது. தமிழ்நாட்டில் இது பயிராக்கப்படுவதில்லை யாயினும் காடுகளில் வளர்கின்றது என்று சொல்வர்.

தாமரை யாவருக்கும் தெரிந்ததொன்று. இதன் முள்ளுடைய தண்டைப்பற்றிக் கூறியுள்ளனர். இதை அறிவியலில் Nelumbium speciosa என்றழைப்பர்.

ஞாழல் குறிஞ்சிப்பாட்டிலும் சங்கநூல்களிலும் மிகப் பரவலாகக் கூறப்பட்ட மரமாகும். இதன் பூ பசுமை கலந்த சிவப்பு நிறமுடைய தென்று கூறுவர். இதன் பூ மீனின் முட்டை போன்று சிறியதாகவும் கடுகளவினதாகவும் இருப்பதாகக் கூறப்பட்டுள்ளது. இதன் இளந் தளிர் அழகாகவும் பளபளப்பாகவும் இருக்குமென்று கூறப்பட் டுள்ளது. இதை சுந்தரி (Sundri) என்று வங்காளத்தில் அழைப்பர். சுந்தரவனக் காடுகளில் ஞாழலே சூழலாக இருந்தன. தமிழ்நாட்டுக் கடற்கரையில் இந்த மரம் அழிக்கப்பட்டுவிட்டது. அறிவியலில் Heritiara littoralis என்றழைப்பர். தற்காலத்தில் சவுண்டல் என்றுமழைப்பர்.

மவ்வல் குறிஞ்சிப்பாட்டிலும் சங்கப்பாடல்களிலும் வீட்டில் வளர்த்த மல்லிகையாகக் கூறுகின்றார்கள். இது வீட்டில் வளர்க்கும் நொச்சியுடன் கூறப்பட்டுள்ளது. இது அறிவியலில் Jasminium officinalis ஆகும். இது பொதுவாகக் காணப்படும் மல்லிகை ஆகும்.

குறிஞ்சிப்பாட்டில் கொகுடி என்றொரு முல்லை வகை சொல்லப் பட்டுள்ளது. இது தேவாரத்திலும் கூறப்பட்டுள்ளது. இந்தப் பெயர் கன்னடத்தில் சிறிது திரிந்து வழங்குவதாகக் காணப் படுகின்றது. இது Jasminum Bignonacea என்னும் மலையாளக் காட்டு மல்லிகையாக இருக்கலாம்.

சேடல் என்பதை பவளக்கால் மல்லி என்று இக்காலத்தில் அழைப்பர். இதை வடமொழியில் பாரிஜாதம் என்றழைப்பர். இதுவும் மல்லிகைக் குடும்பத்தைச் சேர்ந்தது. இதை அறிவியலில் Nyctanthus arbortristis என்றழைப்பர்.

ஒருவகை சிறந்த வகையான சாதி மல்லிகை செம்மல் என்று அழைக்கப்பட்டுள்ளது. சாதிமல்லிகை மல்லிகையினத்தில் உயர்ந்த வகையாகும். ஆதலால் இதை அறிவியலில் Jasminum grandiflorum என்றழைப்பர். இதிலிருந்து நறுமணத்தை எடுத்து நறுமணத் தைலங்களில் பயன்படுத்துவர். செம்மல் என்ற சொல் சிறந்த என்ற பொருளில் வந்துள்ளது. இதன் வணிகப் பெயர் Royal என்பதாகும். நிகண்டுகளில் இது சிறுசண்பகம் என்றும் அழைக்கப்பட்டுள்ளது.

செங்நரலி என்ற செடியைக் கண்டுபிடிப்பது முடியாததாக உள்ளது. இதைப் பற்றி யாதொரு குறிப்பும் சங்கநூல்களிலும் பிற்கால நூல்களிலும் இல்லை. இது சிவப்பாக இருக்குமென்பதும் நீர்ச்செடி என்பதும் தெரிகின்றது. ஆதலின் இது அறிவியற்படி Trapa bispinosa ஆக இருக்கலாம்.

கோடல் காந்தளின் ஒருவகையாகக் கூறப்பட்டுள்ளது. காந்தளில் ஒருவகை என்று கொள்ளலாம் என்பது ஐயத்துக்குரியது.

கைதை கூறப்பட்டுள்ளது. கைதை என்ற பெயர் சங்க நூல்களில் குறிஞ்சிப் பாட்டில் மட்டுமே வருவது கவனிக்கத்தக்கது. இது சங்கப்பாடல்களில் தாழையென்றே அழைக்கப்படுகின்றது. வடமொழியில் தாழைக்கு வழங்கும் கேதகி என்ற பெயர் கைதை என்ற பெயரிலிருந்து வந்ததாகக் கருதுவர். இதை அறிவியலில் Pandanus Odoratissimus என்றழைப்பர்.

வழை என்பது சுரபுன்னை என்று உரைகளிலும் நிகண்டுகளிலும் அழைக்கப்படும். அறிவியலில் இதை Ochrocarpus longifolius என்றழைப்பர். இந்த மரத்தை Garcinia என்று அதே போன்ற மரத்தொடு குழப்புவர். Garcinia என்பதை வழைபுன்னை என்று ஓரளவு ஒற்றுமை காரணமாக அழைத்தனர்.

காஞ்சி என்ற மரம் அறிவியற்படி Trawia nudiflora ஆகும். இது நீர்சூழ்ந்த நிலங்களிலும் ஆற்றோரங்களிலும் காணப்படும். சங்கநூல்களில் இதன் பூ கொத்தாக மாலைபோல் தொங்குவதாகவும் பச்சைப் பருப்பைக் கோத்தாற் போன்று பூக்கள் இருந்தனவாகவும் கூறப்பட்டுள்ளது. இதில் மகரந்தத்தூள் நிறைவாகவும் சிறிது பச்சையாகவும் இருக்குமென்று கூறப்பட்டுள்ளது. பூக்களும்

வெள்ளிர்கலந்த பச்சையாக இருக்கும். இந்தச் செய்திகள் இயற்கையில் உண்மையானவையே.

நெய்தல் என்ற பெயர் திரும்பவும் குறிஞ்சிப்பாட்டில் வருகின்றது. நச்சினார்க்கினியர் கருங்குவளை என்று இந்த நெய்தலுக்குப் பொருள் கூறியுள்ளார். நீலநிறம் மிகுந்திருந்த ஒருவகைநெய்தலுக்கு இப்பெயர் கூறினரோ என்பது தெரியவில்லை. ஆனால் இதுவும் ஏற்கனவே கூறிய நெய்தல் என்பதில் ஐயமில்லை. ஆதலின் இதையும் Nymphaea stellata என்றுதான் கொள்ள வேண்டும். நெய்தலும் ஆம்பலும் நிறத்தில் சிறிது மாறுபட்டதால் அவைகளைத் தனிவகையாகக் கொண்டனர் என்பது தெரிகின்றது. ஆனால் அறிவியற்படி அவை ஒரே வகைதான். நிறத்தில் தான் சிறிது மாறுபாடுண்டு.

பாங்கர் என்பது ஒரு கொடி என்று உ. வே. சாமிநாதய்யர் எழுதியுள்ளார். கலித்தொகை (111) அதைக் கொடி என்றே சொல்கின்றது. ஆனால் நச்சினார்க்கினியர் ஓமை என்ற மரம் என்று பொருள் கூறியுள்ளார். ஓமை ஆச்சா இனத்தைச் சார்ந்தது. இந்த மரத்தை யானைகுத்தி உணவு உண்பதாகச் சங்கநூல்களில் கூறப்பட்டுள்ளது. நச்சினார்க்கினியர் உரையே சரியென்று கருதினால் ஓமை அறிவியலில் Hardwickia pinnata என்பதாகும். ஐயமின்றி இதைக் கண்டுபிடிக்க முடியவில்லை, மராம் என்ற மரம் குழப்பத்தைத் தருகின்றது. திருமுருகாற்றுப்படையில் மராம் என்ற மரம் உருண்டையான பூவை உடையது என்று சொல்லியிருக்கும் போது ஏனைய சங்கநூல்கள் திருகிய இதழ்களுடைய மொக்குகளை யுடைய வெண்கடம்பு என்று சொல்லப்பட்டிருக்கின்றது. திருமுருகாற்றுப்படை ஆசிரியர் கடம்ப மரத்தின் உருண்ட பூக்களை மராமரத்திற்கு உரியதாகச் சொன்னமையால் நிகண்டுகளிலும் இந்தக் குழப்பத்தைக் காண்கின்றோம். வறண்ட இடங்களில் மரா மரம் சொல்லப்பட்டிருப்பதையும் பூவின் தன்மையையும் நோக்கினால் மரா மரத்தை அறிவியற்படி Shorea talura அல்லது Shorea thumburgia என்றுதான் கருதவேண்டும். ஆனால் இந்தச் செய்தியும் மேலும் ஆராய வேண்டியதாகும். நிகண்டுகள் மராமரத்தைச் சால மரம் என்று சொல்லவே அதைச் சென்னைப் பல்கலைக் கழக அகராதியும் கலைக்களஞ்சியமும் அப்படியே கடைப்பிடித்து Shorea Robusta என்று எழுதினர். இந்த மரம் தென்னிந்தியாவில் காணப்படுவதில்லை. வட இந்தியாவில் காணப்படும் ஒரு மரத்தை, சங்கநூல்கள் கூறின என்பது முற்றிலும் தவறான செய்தி ஆகும்.

(தொடரும்)

———

# நெஞ்சு பொறுக்குதிலையே

[க. சி. கமலையா]

### நொண்டிச் சிந்து

நெஞ்சு பொறுக்கு திலையே—இந்த
நிலைகெட்ட தமிழரை நினைந்துவிட்டால்
கெஞ்சிக் கெஞ்சித் திரிவார்—மேலும்
கீழான நிலையைச் சென்றடைவார்
பிஞ்சில் பழுத்து நிற்பார்—பிறர்
பேச்சுக்கும் ஏச்சுக்கும் இலக்காவார்
நஞ்சுமிழ் விழி வேலாம்—நன்மனை
நாடா தோடுவார் நாடி மதுவை (நெஞ்சு)

குடித்துக் குடி கெடுப்பார்—ஐயோ
கொண்ட மனைவியைப் போட்டடிப்பார்
அடித்து முதைப் பவரிடம்—நான்
ஆண்டானே உங்கள் அடிமை யென்பார்
பிடியென்று பிச்சை யிட்டால்—அதனைப்
பெரும் பேறெனவே பேணி நிற்பார்
விடியா வறுமை விடியாதா—என
வீறு கொள்ளாரே வெப்ப முறுர் (நெஞ்சு)

தமிழ் தமிழ் என்று சொல்லி—நாளும்
தமிழன் தலைதூக்க விட மாட்டார்
அமிழ்தின் இனிய தமிழை—இவர்
அங்காடிப் பொருளாய் மாற்றிடுவார்
குமிழ் கொப்புளிக்கும் இளமை—அதனைக்
குற்றேவல் பொருளாய்க் குலைத்திடுவார்
சிமிழ் கமழ் நான*மென—இனியும்
சிக்கிக் கிடப்பா ரிருட் கோட்டத்திலே (நெஞ்சு)

இம்மை மறுமை பேசி—எங்கும்
ஏமாற்றி நிற்பவரை எடுத்தெறியார்
செம்மை நெறி யறிந்துமே—நனி
சீரிய வழியிற் செல்ல மாட்டார்
தம்மை நம்பி வாழும்—கிளையைத்
தகர்த் தெறிவார் நொடிப் பொழுதினிலே
கைம்மைக் கோலம் பூணும்—இவர்
கசடர் எடுப்பார் கைப்பிள்ளை யெனவே. (நெஞ்சு)

———

* நானம் - கஸ்தூரி.

# குடந்தைக் கீழ்க்கோட்டம் கல்வெட்டுகள்

[டாக்டர் இரா. கலைக்கோவன், எம்.பி.பி.எஸ்., டி.ஓ.]

(முன் இதழ் ௬௧௨ஆம் பக்கத் தொடர்ச்சி)

இராசகேசரியின் பதினைந்தாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டின் மூலம் கலயன் மாணிக்கம் என்பார், திருக்கீழ்க் கோட்டத்துப் பெருமானடிகள் கோயிலில் விளக்கொன்று எரிக்கக் கொடையளித்த செய்தி தெரிய வருகிறது.[15]

திரு. எஸ். ஆர். பாலசுப்பிரமணியம், இந் நான்கு கல்வெட்டு களுள், இராசகேசரியின் பதினைந்தாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டை முதலாம் ஆதித்தனுடையதாகவும், இராசகேசரியின் ஐந்தாம் ஆட்சி யாண்டுக் கல்வெட்டை முதலாம் இராசராசனுடையதாகவும் குறிப் பிடுகிறார்.[16] இதில் முதல் கணிப்பு முற்றிலும் பொருத்தமே. மன்னன் பெயரற்ற இந்த இராசகேசரியின் பதினைந்தாம் ஆட்சி யாண்டுக் கல்வெட்டு முதலாம் ஆதித்தனுடையது என்பதில் இரண்டாம் கருத்துக்கு இடமிருக்க முடியாது. ஏனெனில் முதலாம் ஆதித்தனைத் தவிர உயரிய ஆட்சியாண்டுகள் உடைய பிற இராச கேசரிகள் அனைவருமே முதலாம் இராசராசனுக்குப் பிற்பட்டவர்கள். இவர்கள் கல்வெட்டுகள் அனைத்துமே, அவரவர்க்குரிய மெய்க் கீர்த்திகளுடன்தான் தொடங்குகின்றன. இதில் விதிவிலக்குகள் மிகமிகக் குறைவு. முதலாம் இராசராசனுக்கு முந்தைய இராச கேசரிகளுள் உயரிய ஆட்சியாண்டு உடைய ஒரே இராசகேசரி முதலாம் ஆதித்த சோழன்தான். மேலும் இந்தப் பதினைந்தாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டில் இறைவன் பெயர், திருக்கீழ்க் கோட்டத்துப் பெருமானடிகள் என்றிருப்பது குறிப்பிடத்தக்கது. முதற் பராந்தகனின் கல்வெட்டுகளில் இறைவனுக்கு இப் பெயர் தான் வழங்குகிறது. பின்வரும் மன்னர்கள் காலத்தில் இப் பெயர் மாறுகிறது. கண்டராதித்தன் காலத்தில் இறைவன் திருக்கீழ்க் கோட்டத்துப் பெருமானடிகள் என்றும், திருக்கீழ்க் கோட்டத்துப் பரமசாமி என்றும் அழைக்கப்படுகிறார். உத்தமசோழன் காலத்தில் இறைவன் கீழ்க்கோட்டத்துப் பரமசாமி என்று மட்டும் குறிக்கப்படு

---

15. ARE 252 of 1911.

16. முற்காலச் சோழர் கலையும் சிற்பமும், எஸ். ஆர். பால சுப்பிரமணியம், பக். 122, பக். 124.

கிருர். முதலாம் இராசேந்திரனின் கல்வெட்டுகளில் கீழ்க்கோட்டம் உடையார் என்று அழைக்கப்படுகிருர். இவையனைத்தின் அடிப் படையில் நோக்கும்போது, இப் பதினைந்தாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு முதலாம் ஆதித்தனுடையது எனக் கொள்வதில் தவ றேதும் இருக்க முடியாது. இக் கல்வெட்டின் எழுத்தமைதியும் இம் முடிவுக்கு ஒத்து வருவது குறிப்பிடத்தக்கது.

முதலாம் இராசராசனுடையதாகத் திரு. எஸ். ஆர். பால சுப்பிரமணியம் குறிப்பிடும் கல்வெட்டு, இராசகேசரியின் ஐந்தாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டாகும். இதில் வீரசோழத் தெரிஞ்ச கைக்கோளர் பிரிவைச் சேர்ந்த ஒருவர் இக் கோயிலுக்குக் காணிக்கைகள் செலுத்த எழுபது ஈழக் காசுகள் தந்த செய்தி உள்ளது. இக் கல்வெட்டில் இருக்கும் 'வீரசோழத் தெரிஞ்ச கைக் கோளர்' என்ற தொடரே வாய்ப்பாக உதவியும் இதைத் திரு. எஸ். ஆர். பாலசுப்பிரமணியம் எப்படி முதலாம் இராசராசனுடையய் தாகக் கொண்டார் என்பதுதான் புதிராக உள்ளது. வீரசோழன் என்பது முதற் பராந்தகனின் சிறப்புப் பெயராகும். இப் பெயர் உள்ளதால்தான் குமரன் தூதுவன் கொடையளித்த செய்தியைக் கூறும் இராசகேசரியின் மூன்ரும் ஆட்சியாண்டுக் கல்வெட்டு கண்டராதித்தனுடையது என்று ஆய்வாளர்கள் கருதுகிருர்கள். எனில் இதே பெயருள்ள இந்த ஐந்தாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு மட்டும் எப்படி இராசராசனுடையதாகும்! மேலும் 'ஈழக்காசு', பராந்தகனுடைய ஈழ வெற்றியின் பலனுக இருக்கலாம். இராச ராசன் ஈழத்தை வென்றது அவனது ஆரும் ஆட்சியாண்டிற்குப் பிறகுதான் என்று அறிஞர்கள் கருதுகிருர்கள்.[17] இந்நிலையில் இந்த ஐந்தாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டை எப்படி முதலாம் இராசராசனுடையதாகக் கொள்வது? கல்வெட்டில் வரும் பெயரும், செய்தியும், ஆட்சியாண்டும், இந்த இராசகேசரிக் கல்வெட்டு, திரு. எஸ். ஆர். பாலசுப்பிரமணியம் கருதுவதுபோல் முதலாம் இராசராசனுடையதன்று. கண்டராதித்தனுடையதே என்று தெளி வாகச் சுட்டுவதை யாரே மறுக்க முடியும்?

இனி மற்ற இரண்டு இராசகேசரிக் கல்வெட்டுகளைக் காண் போம். இவற்றுள் ஒன்று இராசகேசரியின் மூன்ரும் ஆண்டிலும், இன்னென்று ஆட்சியாண்டு தெரியாத நிலையிலும் வெட்டப்பட்டுள் ளன. மூன்ரும் ஆட்சியாண்டுக் கல்வெட்டில் இறைவன் திருக் கீழ்க் கோட்டத்துப் பரமசாமி என்று குறிக்கப்படுகிருர். கண்டராதித் தனுடையதாகக் கருதப்படும், முதற் பராந்தகன் தண்டம் விதித்த

17. பிற்காலச் சோழர் வரலாறு, தி. வை. சதாசிவப் பண்டாரத் தார், பக். 108.

செய்தி கூறும் இராசகேசரியின் மற்றொரு மூன்றாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டிலும் இறைவன் பெயர் திருக்கீழ்க் கோட்டத்துப் பரமசாமி என்று குறிக்கப்பெற்றுள்ளதை நோக்கும்போது ஐயத்திற்கிடமின்றி இக் கல்வெட்டையும் கண்டராதித்தனுடையது என்று துணியலாம்.

ஆட்சியாண்டு தெரியாத இராசகேசரிக் கல்வெட்டின் செய்தி, கண்டராதித்த சோழனின் மற்ற கல்வெட்டுச் செய்திகளைப் போலவே, விளக்குக் கொடைபற்றிப் பேசுவதுடன், எழுத்தமைதியும் பத்தாம் நூற்றாண்டுக்குரியதாய் அமைந்திருப்பதால், திடமாக இதையும் கண்டராதித்தனுடையதே எனலாம். மன்னன் பெயர் தெரியாத இராசகேசரிக் கல்வெட்டுகளாய்க் குறிக்கப்படும் நான்கனுள் ஒன்று முதலாம் ஆதித்தனுடையதாகலாம் என்பதும், மற்ற மூன்றும் கண்டராதித்தனுடையதாகலாம் என்பதும் இதனால் விளங்கும்.

## இரண்டாம் ஆதித்தனின் கல்வெட்டுகள்

சுந்தரசோழனின் மகனும், தமிழகத்து மன்னர்களுக்குள் ஒளி விளக்காய்த் திகழ்ந்த முதலாம் இராசராசனின் தமையனுமான, இரண்டாம் ஆதித்தன், வீரபாண்டியன் தலைகொண்ட கோப்பர கேசரிவர்மன் என்று வரலாற்றில் புகழப்படும் மாபெரும் ஆற்ற லாளன், இப் பெருமான் கி. பி. 969இல் சில வஞ்சகர்களால் கொலை செய்யப்பட்டு மடிந்த கொடுமையை உடையார் குடிக் கல்வெட்டு உணர்த்துகிறது.[18] மிகச் சில ஆண்டுகளே இளவரசனாக இருந்த இம் மன்னனின் ஆறு கல்வெட்டுகள் இக் கோயிலில் காணப்படுகின்றன.

இம் மன்னனின் இரண்டாம் ஆட்சியாண்டில் வெட்டப் பட்டிருக்கும் கல்வெட்டு, காடன் அச்சன் என்பார், தாம் இருபத் தைந்து கழஞ்சு பொன் கொடுத்து வாங்கிய நிலத்தைக் கோயி லாரிடம் ஒப்புவித்து, அதன் மூலம் இத் திருக் கோயிலில் நந்தா விளக்கொன்று எரிக்க ஏற்பாடு செய்ததைக் கூறுகிறது.[19]

இரண்டாம் ஆதித்தனின் மூன்றாம் ஆட்சியாண்டுக் கல் வெட்டுகள் இரண்டு இங்குள்ளன. இவையும், இம் மன்னனின் நான்காம் ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்றும், இங்கா நாட்டைச் சேர்ந்த கோயில் மயிலை என்னும் பராந்தக மூவேந்த வேளான் இக் கோயிலில் செய்த அறச் செயல்களை வரிசைப்படுத்துகின்றன. திருக்கீழ்க் கோட்டத்துப் பெருமானடிகள் கோயிலில் ஐந்து சிவ

18. Epi. Ind. Vol. XXI, No. 27.
19 ARE 224 of 1911.

யோகிகளுக்கும், வேதங்களில் வல்ல அபூர்விகள் எனப்படும் அறிஞர்கள் இருபது பேருக்கும் உணவிடுவதற்காகத் திருக்குடந்தை ஊரவையார், இவ் வேளானிடம் நிலமொன்றை விற்ற விவரத்தை ஒரு கல்வெட்டும்.[20] திருக்குடமூக்கு ஊரவையாரிடம் நில மொன்றை வாங்கி இக் கோயிலில் பிரபாகரருடைய மீமாம்சைத் தத்துவத்தைப்பற்றிய சொற்பொழிவுகளாற்றி விளக்கி வந்த ஆசிரியர் ஒருவருக்கு, இவ் வேளான், பட்ட விருத்தியாக வழங்கியதை இன்னொரு கல்வெட்டும்,[21] ஐம்பது அந்தணர்களை உண்பிப்பதற்காக, அதற்குரிய தொகையை வருவாய் தரவல்ல நிலத்தை இப் பெருமகன், இக் கோயிலாரிடம் கொடையாகத் தந்ததைப் பிறிதொரு கல்வெட்டும்[22] உணர்த்துகின்றன. பராந்தக மூவேந்த வேளான் செய்திருக்கும் இந்த அறச் செயல்கள் திரு எறும்பியூர்க் கோயில் செம்பியன் வேதிவேளானை நினைவூட்டுகின்றன. அப் பெருமகன் திருஎறும்பியூர்க் கோயிலுக்குச் செய்த அறங்கள் கணக்கிலடங்கா. சோழர்கள் காலத்தில் செல்வர்கள் கொடை வள்ளல்களாகப், பயன்தரும் பழமரங்களாக விளங்கியதைப் பல கோயில்களின் கல்வெட்டுகள் நமக்கு உணர்த்துகின்றன.

(தொடரும்)

20. ARE 230 of 1911.
21. ARE 233 of 1911.
22. ARE 231 of 1911.

---

## குற்றங் காண்க! குறையினைக் களைக!

[வேலூர் ம. நாராயணன் எம். ஏ.]

குற்றங் காண்க! குற்றங் காண்க!
நற்றமிழ் நாட்டின் பொற்புடைச் செல்வ!
குற்றங் கண்டே குறையினைக் களைக!

அறிவிலி குற்றம் அகிலம் அறியும்
அறிவிலி அதனை அறவே அறியான்!

அறிஞன் குறைபா டறிஞனே அறிவான்
அகிலம் அதனை அணுவும் அறியா:

அறிவிலி யாக அலைவதை விடவும்
அறிஞன் எனும்பேர் பெறநீ முயல்க!

குற்றங் காண்க! குறையினை அறிக!
உன்றன் குறையினை ஒவ்வொன் றாக
நன்றாய்க் காண்க! நாளும் களைகவே!

# குறிஞ்சிப்பாட்டின் சிறப்பியல்புகள்

[டாக்டர் திருமதி சரளா இராசகோபாலன்,

தமிழ்த்துறை, இராணி மேரி கல்லூரி, சென்னை.]

'பொய்யா நாவிற் கபிலர்' என்று பிற புலவர்களால் பாராட்டப் பெற்ற கபிலர் அகம், புறம் ஆகிய இரண்டிலும் 235 பாடல்களைப் பாடியுள்ளார். இவர் நெய்தல் திணையில் கற்பொழுக்கத்தில் ஒரே ஒரு பாடலைத் தவிர (நற். 291) மற்றவற்றைக் குறிஞ்சித் திணையிலேயே பாடிக் குறிஞ்சிக் கபிலர் என்ற பெருமைக்குரியவராகின்றார், இவர் பாடிய குறிஞ்சித்திணைப் பாடல்களுள் குறிஞ்சிப் பாட்டு ஒன்றே நெடும் பாட்டு எனலாம். அதனால் அது 'பெருங் குறிஞ்சி' என்றே அழைக்கப்படுகிறது.

இப் பெரும் புலவர் தோழி கூற்றாக மட்டும் 126 பாடல்களைப் பாடியுள்ளார். இதிலிருந்து இவருக்குப் பிடித்த அகமாந்தர் தோழியே என்று சொல்லலாம். இவருடைய தோழியின் தனிச் சிறப்பிற்குக் குறிஞ்சிப்பாட்டு ஒன்றே சாலும்.

களவுத் துறைகளில் இவரே அனைவரினும் அதிகமாகப் பாடியுள்ளார். களவுக்கும் கற்புக்கும் பாலமாக அமைகிற அறத்தொடு நிற்றல் துறையை இவர் கையாண்டமை தனிச்சிறப்புடையதாகும்.

சங்க இலக்கியங்கள் அனைத்தும் தொகுக்கப்பெற்ற தனித் தனிப் பாடல்கள் குறிஞ்சிப் பாட்டைத் தவிர மற்ற எந்தப் பாடலும் வேற்று மொழியாளனின் வேண்டுகோளுக்காக, தமிழ்ப் பண்பாட்டை அறிவுறுத்தும்பொருட்டுப் பாடியதாகத் தெரியவில்லை. குறிஞ்சிப் பாட்டு ஒன்றே அந்தப் பெருமையைப் பெறுகிறது.

ஆரியர்கள் எண்வகை மணத்தில் காந்தருவம் ஒழிந்த மற்றவை பெருமைக்குரிய ஐந்திணை ஒழுக்கத்தோடு மாறுபட்டன. கைக்கிளை, பெருந்திணை என்று சொல்லும் தகையன. காந்தருவத்தை ஒரோ வழி நம் களவு மணத்தோடு ஒப்பிடலாம். கந்தருவம் கற்பில் முடிதல் கட்டாயமில்லை. களவில் குழந்தைப்பேறும் உண்டாகலாம். இதைச் சாகுந்தலம் விளக்கிக் கூறுகிறது. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் உலகில் பண்பட்ட இனம் என்று கருதப்பட்ட தமிழினத்தில் கற்பில் நிறைவுறாத களவு கிடையாது. களவில் குழந்தைப் பேறு கிடையாது என்று வரம்பு கட்டினர்.

அதனால் கபிலர் பெருமான் தமிழர்களின் பண்பாட்டினைப் படம் பிடிக்கின்ற களவின் வழிவந்த கற்பைப் புகழ்ந்து கூற இந்நூலைப் பாடியிருக்கலாம். வடவர்கள் தமிழர்களின் இக் களவொழுக்கத்தை நையாண்டி செய்தும் இருக்கலாம். அதனால் அக்காலச் சூழலில் அகத்துறைப் பாடலில் வல்லவராகக் கருதப்பட்ட கபிலர் வடவர் களின் எள்ளலை முறியடிக்கும் முகமாக இதைப் பாடியிருக்கலாம். மன்னனாகிய பாரிக்கு நண்பராக விளங்கிய கபிலர் ஆரிய அரசருக்கு ஆசானாக இப் பாடலின் மூலம் மாறுகிறார்.

சங்க இலக்கிய அகத்துறைகளில் மிகவும் நுட்பமானது அறத் தொடு நிற்றல் துறை. மற்ற துறைகளில் வழுக்கல் நேரினும் ஆபத்தில் இந்தத் துறையில் தோழி சிறிது வழுவினும் தலைவியின் நாணத்திற்கு இழுக்கு ஏற்படும். அதனால் தோழி. இத்துறையில்

"இகல்மீக் கடவு மிருபெரு வேந்தர்
வினையிடை நின்ற சான்றோர் போல
இருபே ரச்சமோடு" (குறி. பா. 27-29)

ஆற்றவேண்டியதாகிறது. தலைவியின் நாணுக்கும் இழுக்கு வரக் கூடாது. செவிலிக்கும் சினம் வரக்கூடாது, தோழி இத்துறையில் தான் நெருப்பாற்றின் மேல் நின்று நடனம் ஆடுகின்றாள்.

இந்தத் துறையில்தான் இளைய நெஞ்சங்களின் தவற்றை முதுமை ஒத்துக்கொள்ளுமாறு செய்யவேண்டும் அதனால் படிப் படியே ஒருவரை ஒருவர் அறிய வேண்டிய சூழ்நிலை ஏற்படுகிறது. தலைவி தோழி. செவிலி, நற்றாய், தந்தை என ஏணி போலப் படிப் படியாகத் தொடரும் நிலைகளையுடையது இது.

இவ்வமைப்பு முறையைக் கலித்தொகை (39 : 20-25) அழகாகப் படம் பிடித்துக் காட்டுகிறது. இத்தகைய நுண்துறையாக இருப்பதால்தான் கபிலர் பெருமான் தமிழின் சிறப்பினைக் காட்ட அறத்தொடு நிற்றல் என்னும் துறையை எடுத்தாண்டார்.

மற்ற இலக்கியங்களை விட. குறிஞ்சிப் பாட்டில்தான் கற்பின் கோட்பாடு (Theory) விளக்கப்படுகிறது. (குறி. பா. 13-18)

களவு கற்பு மணங்களின் விளக்கமும் வேறுபாடும் ஆரிய அரசனுக்குக் காட்டவேண்டிச் சங்க இலக்கியத்திலேயே இவ்வொரு நூலில்தான் குறிக்கப்படுகிறது. களவின் வழி வந்த கற்பு,

"மாதரு மடனு மோராங்குத் தணப்ப
நெடுந்தே ரெந்தை யருங்கடி நீவி
இருவே மாய்ந்த மன்றல்" (குறி. பா. 19-22)

"எமியேம் துணிந்த ஏமஞ்சால் அருவினை"
(குறி. பா. 32)

என்றும், களவின்வழிவாராக் கற்பு மணத்தை,

"கொடுப்பினன் குடைமையும் குடிநிர லுடைமையும்
வண்ணமுந் துணையும் பொரீஇ யெண்ணாது"
(குறி. பா. 30-31)

என்றும் வேறுபாடும் உணர்த்தப்படுகிறது. தலைவனின் கூற்றாகவும் கற்பு மணம் கூறப்படுகிறது.

"நேரிறை முன்கை பற்றி நுமர்தர
நாடறி நன்மண மயர்கம்" (குறி. பா. 231-232)

எனத் தமிழர் திருமணத்தின் சிறப்பும் உணர்த்தப்படுகிறது. தமிழ் மகளின் கற்புத் திண்மையும் புலப்படுத்தப்படுகிறது.

சங்க இலக்கியத்தில் குறிஞ்சி மகளின் வாழ்க்கை கூறப்படினும் இத்துணை அளவிற்குக் கன்னியரின் தினைப்புன வாழ்க்கையைக் குறிஞ்சித்திணை ஒன்றே விளக்குகிறது. மலைவளம், அருவியின் வளம், கிளி கடிதல், மலர்களைப் பறித்தல், தழையாடை நெய்தல், ஆற்றில் நீராடி முடி ஆற்றுதல் முதலிய பலவேறு செயல்களும் கூறப்படுகின்றன. (35-106)

சங்க இலக்கியம் களவு தோன்றுகின்ற சூழல்களாகக் களிறுதரு புணர்ச்சி, பூத்தரு புணர்ச்சி, புனல்தரு புணர்ச்சி ஆகியவற்றைக் கூறும். இங்குக் களிறுதரு புணர்ச்சி (153-175) புனல்தரு புணர்ச்சி (176-181) என்பவற்றுடன் ஞமலி தரு புணர்ச்சி (128-150) என்று புதுவகையும் கூறப்படுகிறது. இஃது எந்த இலக்கியமும் கூறாதது. தலைவனின் வீரத்தையும் அருளுள்ளத்தையும் செவிலிக்குப் புலப்படுத்தவே அனைத்துப் புணர்ச்சிகளையும் கூறுகிறாள் தோழி.

சங்க கால மகளிரும் மைந்தரும் மலர் அணிந்து கொள்ளுதலில் பெரு விருப்புடையர்கள். கபிலர் பெருமான், ஆரிய அரசனுக்கு நம் மலர்களின் சிறப்பைக் காட்ட, மகளிர் பூக்கொய்வதாகக் கூறுகின்ற இடத்தில் 99 வகை மலர்களைக் காட்டுகிறார். இது தாவரவியல் வல்லுநர்க்கு வியப்பூட்டும் விருந்தாகும். இச் சிறப்பு வேறு எந்த நூலுக்கும் இல்லை.

சங்க இலக்கியம் மாந்தர்களின் அகப்பண்புகளை விளக்கும் அளவிற்குப் புறவர்ணனைக்கு இடம் தரவில்லை. மகளிரின் உறுப்பு நலனை வருணிக்கும் பாதாதிகேச வர்ணனையோ, கேசாதிபாத வர்ணனையோ இடம் பெறவில்லை. பிற்கால இலக்கியங்களில் நயனப்

பத்து. பயோதரப்பத்து என்று தனிவகை பிரபந்தங்கள் தோன்றியது போன்று தனி உறுப்புகளுக்குச் சிறப்பிடம் தரவில்லை. அதிலும் மகளிரின் உறுப்புகளை வர்ணிப்பது போன்று ஆடவரின் உறுப்பு நலனைக் கூறுதல் மரபன்று. குறிஞ்சிக் கபிலர் இங்கு மலரின் கூற்ருகத் தலைவனின் இயற்கை செயற்கை வனப்பைக் கூறுகிருர். கேசாதிபாத முறையில் விளக்கம் இந்நூலில்தான் தரப்படுகிறது. நாணுடைய மகளிர் இவ்வாறு வர்ணித்தல் ஏற்புடையதா என்ற விஞ எழலாம். தலைவன் தலைவிக்கு ஏற்றவனு என்ற விஞ செவிலியின் உள்ளத்தில் ஓடுகின்ற நிலையில் தலைவன் தலைவிக்கு ஏற்றவனே என்று செவிலிக்கு உணர்த்துவதற்காகவே தோழி தலைவனின் புறநலனை விரிவாகவே கூறுகிருள் (கு.பா. 106-127)

சங்ககால மக்களின் விருந்தோம்பற் சிறப்பு அகத்திணைப் பாடல்களில் முல்லைத்திணையில் கூறப்படுகிறது. தலைவன் பாகனிடம் அல்லில் ஆயினும் விருந்துவரின் உவக்கும் தலைவியின் சிறப்பைக் கூறுவான். விருந்தோம்பும் முறையினை இத்துணை விரிவாக எந்தச் சங்க இலக்கியமும் கூறவில்லை. களவு வாழ்வில் கற்பு வாழ்வினை (விருந்தோம்பல்) சிந்திக்கும் தலைவனைக் காட்டுவ தில்லை. இப் புதுமை இந்நூலுக்கே உரியது. (குறி. பா. 202-208)

தமிழரின் தனிப்பண்பாட்டினை ஆரிய அரசனுக்கு அறிவுறுத்த விரும்புவதால் கபிலர் கற்புக்குரிய விருந்தோம்பலினைக் களவில் கூறுகிருர்.

தலைவன் தான் செய்த சூளினைப் பொய்த்துவிட்டானே, தெய்வம் வருத்துமோ எனத் தலைவி அஞ்சி இறைவனை வேண்டு கின்ற காட்சிகள் சங்க இலக்கியத்தில் அமைந்துள்ளன. தலைவன் தோழி தலைவியின் அச்சத்தைத் தெளிவிக்கும் பொருட்டு சூள் செய்தலை இந்நூலில்தான் காண முடிகிறது. (குறி. பா. 208-211)

முல்லைத்திணைக்குரிய மாலைப் பொழுது வர்ணனை குறிஞ்சியில் இடம் பெற்றுள்ளது (குறி. பா. 215-230) தலைவனின் பொறுப் புணர்ச்சியைக் காட்ட, மாலையில் அவன் மகளிருக்குப் பாதுகாப்பான எல்லை வரை கொண்டு விடுவதைக் காட்டுவதற்கு இம் மாலைக்கால வருணனை கருவியாக்கப்படுகிறது.

களவின் முட்டுப்பாட்டை அகநானூற்றுப் பாடலில் (122) கபிலர் நயம்பட அழகாகக் காட்டுவர். இந் நூலிலும் களவின் முட்டுப் பாடுகளை ஆசிரியர் காட்டுகிருர். (240-243) செவிலியிடம் கூறும் தோழி இக் களவு வாழ்க்கை நீங்கி இடையரு அன்பு வாழ்க்கை வாழ, நீதான் வழிவகுக்க வேண்டும் என்ற குறிப்பையும்

வைக்கிருள் அறிவு சான்ற தோழி. தலைவன் உடல் இன்பத்திற்காக வருபவன் அல்லன். அன்பிற்காகவே கட்டுப்பட்டவன் என்பதையும் காட்ட,

"......முனிய லுருஅ
இளமையி னிகந்தன்று மிலனே வளமையிற்
றன்னிலை தீர்ந்தன்று மிலனே" (243-245)

என அவனுடைய நனி நாகரிகப் பண்புடைமையையும் காட்டுகிருர்.

தோழி தலைவன் வரும் வழி ஏதங்களை அறத்தோடு நிற்றல் துறையில் கையாளுகிருள். (251-261) இவ்வழி ஏதத்தில் குறிஞ்சிநில வழி ஏதங்கள் மட்டுமன்றி நெய்தல்நில வழி ஏதங்களும் கலக்கின்றன. (256-257) வழி ஏத அருமையைக் கூறித் தலைவனின் முயற்சி, தலைவிபால் கொண்ட அன்புடைமையைப் புலப்படுத்துகிருர். அவனுக்கு ஏதேனும் ஏதம் ஏற்படின் தலைவி உயிர் வாழாத் தன்மையையும் புலப்படுத்திச் செவிலியை விரைவாக நற்ருய்க்கு அறத்தொடு நின்று வரைவு முடிக்கச் செய்கிருள்.

சங்க இலக்கியங்களில் தலைவனை வரைவு கடாவும் உத்தியாக தலைவியின் ஆற்ருமை கையாளப்படுகிறது. குறிஞ்சிப்பாட்டில் தலைவன் வராத நாட்களில் தலைவியின் பெருமதர் மழைக்கண் அழுவதால் மழை பெய்த காலத்து அழகு இழந்த மலரைப் போன்று மாறுகிறது. தலைவன் வரும் வழி ஏதம் கண்டு தலைவியோ வலையிலகப்பட்ட மஞ்ஞை போன்று நடுங்குகிருள் (247-251) தலைவியின் ஆற்ருமையைக் கூறி அதனை நீக்குதல் செவிலியின் கடமையாக விட்டுவிடுகிருள் தோழி.

குறிஞ்சிப் பாட்டு நாடகப் பாங்கில் அமைந்திருக்கிறது. தலைவியின் நிலையைக் கூறி முடிவைத் தோழி கூருமல் தாயிடமே விட்டு விடுகிருள்.

சங்க இலக்கியங்களில் தலைவனின் ஏதேனும் ஒரு பண்பைக் கூறித் தோழி அறத்தொடு நிற்கிருள். குறிஞ்சிப் பாட்டில் தலைவன் தலைவிக்கு எல்லாவற்றிலும் பொருத்தமானவளே எனக் காட்ட அனைத்துப் பண்புகளையும் கையாளுகிருள் தோழி. தலைவனின் அழகு (107-127) வீரம் (128-180), உயர்ந்த குடிச்சிறப்பு (187-199) இல்லறச் சிறப்பு (201-209) பொறுப்புணர்ச்சி (235-237) அன்பு நிலை (238-239) பண்புடைமை (243-245) ஆகிய அனைத்துப் பண்புகளைக் கூறி வரைவுக்கு வழி தூண்டுகிருள்.

அறத்தொடு நிற்கும் வகை ஏழனுள் ஏதேனும் ஒன்றால் தோழி அறத்தொடு நிற்பாள். குறிஞ்சிப்பாட்டு நெடும்பாட்டாதலால், எழுநிலையையும் பயன்படுத்துகிறாள் தோழி. எளித்தல் 107-127; 128-180; 187-199; 201-209; 235-237; 243-245 ஏத்தல் (142-152) வேட்கை யுரைத்தல் (247-251) கூறுதல் உசாதல் (3-8) ஏதீடு (165-174) தலைப்பாடு (19-22) உண்மை செப்பல் (212-214) என அறத்தொடு நிற்றலின் ஏழுநிலையும் உணர்த்தப் படுகின்றன.

பிற்காலக் கோவை நூல்களில் ஒரே ஒரு துறையான 'நாணிக் கண் புதைத்தல்' என்னும் 'ஒரு துறையையே சிறப்பாகப் பாடிய 'ஒரு துறைக் கோவை' என்னும் நூல் எழுந்தது. இந்நூலுக்கு வழிகாட்டியாகக் குறிஞ்சிப்பாட்டு அமைகிறது. பல அகத்துறைகள் பயின்ற சங்கப் பாடல்களிலிருந்து அறத்தொடு நிற்றல் என்னும் ஒரு துறையை மட்டுமே தேர்ந்தெடுத்துக் குறிஞ்சிப்பாட்டாக்கியுள்ளார் கபிலர்.

ஆரிய அரசனுக்கு அறிவுறுத்த வந்த இந் நூலில் 1440 சொற் களில் பிரசம் என்ற ஒரு வடசொல் தவிர மற்றவை அனைத்தும் தூய தமிழ்ச் சொற்கள் என்பது பெருமை கொள்ளத்தக்க ஒன் றாகும்.

இவ்வாறு குறிஞ்சிப்பாட்டு பல சிறப்புகளைத் தன்னகத்தே கொண்டு விளங்குகிறது.

---

## வீடுதோறும் திருக்குறள் வழிபாடு

நக்கீரர் கழகப் பொதுச் செயலாளர் திரு. சிறுவை மோகன சுந்தரன் அவர்கள் 'வீடுதோறும் திருக்குறள் வழிபாடு' என்னும் ஓர் இயக்கத்தைத் துவக்கி, அதன் தொடர்பாக நீண்டதோர் அறிக்கை வெளியிட்டுள்ளார். அதில் தமிழகத்திலுள்ள வீடுகள் தோறும் திருக்குறள் புத்தகமொன்றை வாங்கி வைத்துக்கொள்ள வேண்டுமெனவும், குடும்பத்திலுள்ள யாரேனும் ஒருவர் வாரத்தில் ஒரு நாள், ஒரு குறிப்பிட்ட நேரத்தில், குடும்பத்தில் உள்ளோரை, முடிந்தால் நண்பர்களையும் கூட்டிவைத்து ஒரு திருக்குறளை மூன்று முறை படித்து, பின்னர் அதன் உரையினையும் படித்துக் கருத்து விளக்கம் செய்து முடிக்கவேண்டுமெனவும், முடிக்கும்போது 'தமிழ் வெல்க' என்று கூறிப் பின் இரவு உணவு கொள்வது என்ற இனிய எளிய வழிபாட்டு முறையினைச் செய்து வந்தால் நற்பயன் விளையும் எனவும் கூறுகிறார்.

# ஆதீனங்கள் வளர்த்த அருந்தமிழ்

[புலவர் மு. சிவச்சந்திரன், எம். ஏ., பி. எட்.,
துணைப் பேராசிரியர்,
தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.]

(முன் இதழ் ௩௪0ஆம் பக்கத் தொடர்ச்சி)

அக்காலத்தில் மாதவச் சிவஞான சுவாமிகளின் மாணவர்களாயிருந்தவர்கள் தொட்டிக்கலை சுப்பிரமணிய சுவாமிகள், இலக்கணம் சிதம்பரநாதத் தம்பிரான் சுவாமிகள், கச்சியப்பத் தம்பிரான் சுவாமிகள், காஞ்சிபுரம் சரவணப் பத்தர், இராமநாதபுரம் சோமசுந்தரம்பிள்ளை போன்றவர்களாவர்.

பதின்மூன்றுவது பட்டத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகர் அவர்கள் கவிச் சக்கரவர்த்தியாகிய கச்சியப்ப சுவாமிகளுக்கு ஞானசாரியராக இருந்தார்கள்.

பதினைந்தாவது பட்டத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகர் அருளாட்சிக் காலத்தில் கந்தப்பையர் குமாரர் விசாகப் பெருமாளையர், காஞ்சிபுரம் சபாபதி முதலியார், அட்டாவதானம் வீராசாமி செட்டியார், திருவண்ணாமலை வீரபத்திர ஐயர், ஆயுள் வேத பாஸ்கரராகிய சிதம்பரம் தளவரிசை சுப்பிரமணிய பண்டிதர், திருநீர்மலை கோபால கிருஷ்ண கவிராஜ சேகரர், யாழ்ப்பாணம் அளவையம்பதி கனக சபாபதிப் பிள்ளை, ஆதீன சீடவர்க்கத்தினரில் ஒருவராகிய சந்திரசேகர கவிராஜ பண்டிதர் முதலான சென்னை மாநகரத்துளுறையும் செந்தமிழ்ப் புலவர்கள்தாம். ஆதீன மகாவித்துவான் தாண்டவராய தம்பிரான் சுவாமிகளுடன் திருத்தளிச் சேரியை அடைந்து அங்கு நமசிவாய மூர்த்திகள் மகரத் தலைநாள் குருபூஜை மகோத்சவ சுபதினத்தில் தேசிக சுவாமிகளைத் தரிசித்துக் கழிபேருவகை எய்தித் தனித்தனியே கவிபாடித் துதித்தனர். இவர்கள் அருளாட்சிக் காலத்தில் யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர் அவர்கள் திருவாவடுதுறையை அடைந்து ஞானதேசிகரைத் தரிசித்தார். அங்கிருந்து கொண்டு பல பெரியவர்கள் முன்னிலையில் பிரசங்கங்கள் பல செய்தார். அவற்றினைக் கேட்டுத் திருவுளம் மகிழ்ந்த ஞானதேசிகர் 'நாவலர்' என்னும் சிறப்புப் பெயரை அவர் பெயருக்குப் பின்னர் சேர்த்துக்கொள்ளச் செய்தருளினார்கள். அன்று முதல் ஆறுமுக நாவலர் என்று உலகோர் அழைக்கத் தலைப்பட்டனர். மேலும் இவர்கள் அருளாட்சிக் காலத்தில் தலபுராண ஆசிரியர் திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் ஞான தேசிகரை அடைந்து மூவகைத் தீட்சையும் உபதேசமும் பெற்றார். ஞானதேசிகர்மீது பிள்ளை அவர்கள் பிரபந்தங்கள் பலவும் பாடினார்.

தாம் பாடிய பிற புராணங்களின் முன்னும் குருமூர்த்தி தோத்திரங் களாகப் பாடிய பாடல்களிலும் ஞானதேசிகரைப் போற்றித் துதித் துள்ளார்.

பதினாறாவது பட்டத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ சுப்பிர மணிய தேசிகர் மீது மாயூரம் முன்சீப் வேதநாயகம் பிள்ளை அவர்கள் பாடிய பாடல்கள், ஞான தேசிகரின் வள்ளன்மையை விளக்குவன வாக அமைந்துள்ளன. பஞ்சம் வந்தபொழுது ஞானதேசிகர் தமிழக மக்களுக்கும் தமிழ்ப் புலவர்களுக்கும் வாரி வழங்கிய கொடைத் திறனைப் பாராட்டி வேதநாயகம் பிள்ளை அவர்கள் பாடிய பாடல் களில் ஒன்றை இதோ உங்கள் முன் கூறுகின்றேன்.

"படிபடியாகப் பொன்கொட்டி நெற்கொள்ளும் இப்பஞ்சத்திலே
பிடிபிடியாக மணியும் கனகமும் பெட்புறுவோர்
மடிமடியாகக் கட்டிச் செல்லத் தந்தான் பெருவள்ளல் என்றே
குடிகுடியாகத் தொழும் சுப்ரமணியே குணாகரனே"

இப் பாடலில்தான் என்னே ஞானதேசிகரின் வள்ளன்மையும் பிள்ளை அவர்களின் கவிவன்மையும் காணக் கிடைக்கின்றன.

டாக்டர் உ. வே. சா. அவர்களும், ஆதீன வித்துவான் குமார சாமித் தம்பிரான் சுவாமிகளும், ஆதீன வித்துவான் சபாபதி நாவலர் அவர்களும், ராயசம் பொன்னுசாமி செட்டியார் அவர்களும் அவ்வப் பொழுது பட்டத்தில் எழுந்தருளியிருந்த ஞானதேசிகர்களைப் பாராட்டிப் போற்றிப் பல பாடல்களைப் பாடியுள்ளனர்.

இங்ஙனம் திருவாவடுதுறை ஆதீனம் காலங்காலமாகத் தமிழ் மொழியையும் தமிழறிஞர்களையும் பாராட்டியும் தக்க நல் நூல்களைப் பதிப்பித்து வெளியிட்டும் மாநாடுகள் நடத்தியும் வந்த வரலாறு எண்ணி எண்ணிப் போற்றும் தரத்ததாகும்.

இவ்வகையில் ஆதீனங்கள் ஏறத்தாழ 400 ஆண்டுகளாக ஆங்காங்கே அருள் நூல்களை அருளிய வகையிலும் நூல்களைத் தக்கவர்களைக் கொண்டு பதிப்பித்த வகையிலும் தமிழறிஞர்களை இனம் கண்டு பாராட்டிய வகையிலும் மாநாடுகள் கருத்தரங்குகள் நடத்திய வகையிலும் நிலைநிதி வைப்புகள் அமைத்த வகையிலும் கல்லூரிகள் நிறுவி ஆயிரக்கணக்கான தமிழ்ப் புலவர்களை உருவாக்கி வழங்கிய வகையிலும் தமிழை வளர்த்து வந்துள்ள வரலாற்றைத் தமிழகம் என்றும் மறக்க இயலாது. இ∴து உண்மை! புகழ்ச்சி யில்லை!

வாழ்க ஆதீனங்கள்! வளர்க அறச் செயல்கள்!!

முற்றும்

---

# *செம்பாலையும், பாலையாழும் ஒன்று?

[என். எம். சுப்பராமன்

கண்காணிப்பாளர். டான்சி நிறுவனம், மேட்டூர் அணை.]

'செம்பாலையும் பாலையாழும் ஒன்றே' என்று முனைவர் வீ. ப. கா. சுந்தரம் அவர்கள் சென்ற மார்கழிச் செல்வியிற் (சிலம்பு ருகூ, பரல் ரு) கட்டுரை வரைந்துள்ளார். அங்ஙனம் கூறு தற்கு இசை, இலக்கண, இலக்கிய நூற்சான்றுகள் ஏதும் இல என்பதனை அறைவதே இக் கட்டுரையின் சுருக்கக் கருத்து ஆகும்.

'தாரத்துழை தோன்றப் பாலையாழ்' என்னும் பஞ்ச மரபுச் சூத்திரம் (19) பல பொருள்களுக்கு இடம் தரும் ஆழமான பாடல்,

தாரத்துழை என்பதனை 'தார நரம்பின் தானத்தில் தோன்றும் உழை' என்றும் 'ஏறிய (தார) உழை' (சுத்த மத்திமம்) என்றும் பொருள் கொள்ள இடந்தரும். இதனை, எந்தப் பாலையினின்று தோன்றிய தாரத்துழை? அல்லது ஏறிய உழை? அப் பாலை, வல முறைத்திரிபில் வந்ததா? இடமுறைத் திரிபில் வந்த பாலையா? யாழ் முறையில் வந்ததா? அல்லது குழன்முறையா? என்ற பலப்—பல வினாக்கள் எழும். இதனை இசைவழி நன்கு விளக்காது முறை ஒற்றுமை ஒன்றினை மட்டும் கொண்டு கட்டுரை ஆசிரியர் பகரும் முடிவை இசை அறிஞர் ஏற்பாரா?

# பொருத்தமற்ற வினா

[இசை ஆய்வாளர் முனைவர் வீ. ப. கா. சுந்தரம், மதுரை.]

(1) நண்பர் சுப்பராமர் ''தாரத்துழை தோன்றப் பாலையாழ் என்பது பல பொருளுக்கு இடம் தரும்'' என்கிறார். ஆனால் அதற்குரிய பல பொருள் அவர் தரவில்லை; ஒரே ஒரு பொருள் தந்துள்ளார்; அதனையும் முற்றிலும் தவறாகத் தந்துள்ளார். ''ஏறிய தாரமும் சுத்த மத்திம உழையும் என்றும் பொருள் கொள்ள இடம் தரும்'' என்று கூறியுள்ளார் :

இச் சூத்திரம் இணை நரம்பு (ச. ப. உறவுச் சுரம்) தொடுத்துத் தொகுப்பது பற்றிய சூத்திரம். ஏறிய தாரத்திற்கு இணை நரம்பு

---

*முனைவர் வீ. ப. கா. சுந்தரம் அவர்கள் சென்ற மார்கழிச் செந்தமிழ்ச் செல்வி இதழில் (சிலம்பு ருகூ, பரல் ரு) ''தொல்காப்பியர் குறிக்கும் ஆதிமுதற் பெரும்பண்'' என்னும் தலைப்பில் வரைந்திருந்த கட்டுரைபற்றி திரு. என். எம். சுப்பராமன் என்பவர் சில ஐயங்களை எழுப்பியுள்ளார். அக்கட்டுரையின் சுருக்கக் கருத்தினையும், அவர்தம் மறுப்புக்கு முனைவர் அவர்கள் தரும் விடையினையும் இவ் விதழில் வெளியிடுகின்றோம்.

ஏறிய உழையாகுமே (பி. ம) அன்றிச் சுப்பராமர் கூறுவதுபோல சுத்த மத்திமமாகிய உழை ஆகவே ஆகாது. இந்த அடிப்படையை—இன்றியமையாத அடிப்படையை அவர் விளங்காமையால் என்ன கேள்விகள் கேட்கிறோம் என்று தெரியாமலே பொருளொடு தொடர் பற்ற கேள்விகளைக் கேட்கிறார். இனி இன்றுள்ள சுரங்களால் இணை நரம்பு முறையை விளக்குவோம்.

இணை நரம்பு

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ச | ரிரி | கக | மம | ப | = | ச—ப=கு—இ. |
| நி | நிச | ரிரி | கக | ம | = | நி$^{1}$—ம$^{1}$=தாரம்$^{1}$—உழை$^{1}$ |
| நி | சரி | ரிக | கம | ம | = | நி$^{2}$—ம$^{2}$=தாரம்$^{2}$—உழை$^{2}$ |

எனவே "ஏறிய தாரமும் சுத்த மத்திம உழையும் என்று பொருள் கொள்ளலாம்" என்று சுப்பராமர் கூறியது முற்றிலும் தவறு. ஏறிய தாரத்திற்கு பிரதி மத்திமமாகிய ஏறிய உழையே இணையாகும்.

இந்த அடிப்படை அவருக்கு விளங்கவில்லை என்பதை அவரது கேள்வி நிறுவுகிறது. முதற் கேள்வியைச் செம்மையான இசை யிலக்கண அடிப்படையில் அமைத்தால் அன்றோ பிற யாவும் செம் மையாக அமையும். எனவே பொருளொடு பொருந்தாத—அடிப் படை இசையமைப்புக்கு முரண்பட்ட பிற கேள்விகட்கு நீளம் கருதி இங்கு விடை சொல்லவில்லை.

இனி சுப்பராமர் கருத்துப்போல ஏறிய தாரம் (காகலி நிடாதம்) தொடங்கி ஏழு இணை நரம்புகளைத் தொடுத்துத் தொகுத்தால் எந்த ஒரு பண்ணும் உண்டாகாது. ஏனென்றால் அந்தத் தொகுப்பினுள் குரலும் இளியும் (ச. ப.) இடம் பெறாமல் போய்விடும். இந்த இசை இலக்கணத்தை அறியாததனால் எழுந்ததே 'ஏறிய தாரம் என்று பொருள் கொள்ள இடம் தரும்' என்னும் வினா.

"தாரத்துழை தோன்றப் பாலையாழ்"

என்பதற்கு அடியார்க்கு நல்லார் சிலப்பதிகாரத்தில் ஆய்ச்சியர் குரவையுள் தந்துள்ள ஒரே ஒரு பொருள் தவிர—வேறு பொருள் கூற முடியாது என்பதைச் சுப்பராமர் அறிய வேண்டும். இது செம்பாலைக்குரிய ஏழு நரம்புகளையும் கண்டுபிடிக்கும் முறையைக் கூறும் சூத்திரம்; அறிவனார் அமைத்துள்ள அற்புதமான சூத்திரம். செம்பாலை என்பது ஆதி முதற் பாலை; அதன் 7 நரம்பால் அது அரிகாம்போதி ஆகிறது.

என் கட்டுரையில் என்னாலான அளவிற்கு இசையிலக்கணம் ததும்பச் சான்றுகள் காட்டி விளக்கியுள்ளேன். சுப்பராமர் அவற்றை முயன்று விளங்கிக்கொள்ள வேண்டுகிறேன்.

இனி "எந்தப் பாலையினின்றும் தோன்றிய தாரத்துழை" என்று ஒரு பொருந்தாத கேள்வியைக் கேட்டுள்ளார். தாரத்து உழை தோன்றப் பாலையாழ் என்பது பண்ணுப் பெயர்ப்பு பற்றிய தன்று. பண்ணுப் பெயர்ப்பாயின், ஒரு நின்ற பாலை வேண்டும். அதனின்றும் ஒரு பாலை தோன்றும். இதுவே இணை நரம்பு தொடுப்பதால் உண்டாகும் பாலை. தா[1]—உ[1]; உ[1]—கு; கு—இ; இ—து[2]; து[2]—வி[2]; வி[2]—கை[2]; இவ்வாறு இணைமுறை தொடுப்பதை அறியாததால் "எந்தப் பாலையினின்றும் தோன்றிய தாரத்துழை" என்னும் இசையிலக்கணத்தொடு பொருந்தாத வினாவைக் கேட்டுள்ளார்.

———

## மறைமலையடிகள் கலைமன்றத்திற்குத் திரு. ஆளப்பிள்ளை ஐ. ஏ. எஸ். வருகை

தனித்தமிழ்த் தந்தை மறைமலையடிகளார் வாழ்ந்த மனையில் அமைக்கப்பெற்றுள்ள மறைமலையடிகள் கலைமன்றத்தைப் பார்வையிட, சென்னைப் பெருநகர் குடிநீர் வடிகால் வாரிய நிர்வாக இயக்குநர் திரு. ந. ஆளப்பிள்ளை ஐ. ஏ. எஸ். அவர்கள் 21—4—85இல் வருகை தந்தார். தமிழில் பேரீடுபாடும் மறைமலையடிகளாரிடம் தனிப்பற்றும் கொண்ட அவர் பல ஆண்டுகளாக அடிகளார் வாழ்ந்த இல்லத்தைப் பார்வையிட வேண்டுமென்ற அவாவினைக் கொண்டிருந்தார். மன்றத்தில் அடிகளார் பயன்படுத்திய பொருள்களையும் அடிகளார் வழிபட்ட அம்மையம்பலவாணர் திருவுருக்களையும் நானூற்றுக்கு மேற்பட்ட தமிழ்ப் புலவர் பெருமக்களின் படங்களையும் அவர் கண்டு களித்துப் பாராட்டினார். அவர் தம் பாராட்டுரையாவது :

> அடிகளார் வாழ்ந்த திருமாளிகையைக் காண வேண்டுமென என்னுள் எழுந்த வேட்கை முப்பத்தைந்துயாண்டு காலத்தாழ்வுக்குப்பின் இன்று நிறைவேறியது. அடிகள் தமிழர் ஒன்றுனும் மறக்கவியலாத் தமிழ்ப் பணியாற்றியவர். இவரை எத்துணை அளவு அறிந்து போற்றுகின்றோமோ அதுவரை தமிழரும் வாழ்வர். வாழ்க அடிகள் தம் திருப்பெயர்.

அவருடன் குடிநீர் வாரியத்தின் தலைமைப் பொறியாளரும் சைவத்திரு சிவசைலம் பிள்ளை அவர்களின் திருமகனுருமான திரு. சி. தெய்வமணி அவர்களும் கலைமன்றத்திற்கு வருகை தந்தார். அவரும் கலைமன்றத்தின் அமைப்பை வியந்து,

> "கலைக்கோயிலைக் கண்டு களித்தேன். அடிகளார் வாழ்ந்த மாளிகையும் அவர்கள் அன்றுடம் படித்த புத்தகங்களும் தமிழ் ஆர்வம் உள்ளோர்க்கு என்றும் ஊக்கம் அளிக்கும்" என்று பாராட்டினார்.

அவ்விருவரையும் கழக ஆட்சியாளர் திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்களும் கலைமன்றக் காப்பாளர் திரு. சீனிவாசன் அவர்களும் வரவேற்று மன்றத்தைக் காணச் செய்தனர்.

# செய்திகள்

## குமரகுருபரர் குழந்தை வளர்ப்புப் பள்ளி பதினேழாம் ஆண்டு நிறைவு விழா

சை. சி. நூற்பதிப்புக் கழகத்தின் ஆதரவில் நடைபெற்றுவரும் அறநிலையமான தென்னிந்திய தமிழ்ச் சங்கத்தின் சார்பில் நடைபெற்றுவரும் நெல்லைக் குமரகுருபரர் குழந்தை வளர்ப்புப் பள்ளியின் பதினேழாம் ஆண்டு நிறைவு விழா 17—3—85இல் அருள்மிகு நெல்லையப்பர் திருக்கோயில் நின்ற சீர் நெடுமாறன் கலையரங்கத்தில் சிருஞ்சிறப்புமாக நடைபெற்றது. திரு. கா. வ. முத்தையாபிள்ளை அவர்கள் வரவேற்புரையாற்றினர். முன்னாள் நகர் மன்ற உறுப்பினர் திரு. அ. பரமசிவம் அவர்கள் தலைமை ஏற்றார். அவர் தம் உரையில், குமரகுருபரர் குழந்தை வளர்ப்புப் பள்ளியின் சீரிய பணிகளையும், மாணவர்கட்குக் கல்வியொடு நடனம், நாடகம், பாட்டு போன்ற கலைகள் கற்பிக்கப்படுவதையும் பெரிதும் பாராட்டினார். வட்டார ஆய்வாளர் உயர்திரு அண்ணாமலைச் சாமி அவர்கள் கலை நிகழ்ச்சிகளில் பங்கு கொண்ட குழந்தைகட்கும், கல்வியில் முதல் தரம் பெற்ற மாணவர்கட்கும் பரிசுகள் வழங்கினார். கிளைக் கழக மேலாளர் திரு. தி. து. பிச்சுத்தாயப்பன் அவர்கள் நன்றி நவில விழா இனிது நிறைவுற்றது.

## சித்திரைச் சிறப்பு விழா

சென்னை, தெய்வத் தமிழ் மன்றம் ஏப்ரல் 14, 15ஆம் நாள்களில் சித்திரைச் சிறப்பு விழாவினைச் சிறப்பாகக் கொண்டாடியது. மறைமலையடிகள் நூல் நிலைய வள்ளலார் திருவருள் மண்டபத்தில், பதிவுத் துறைத் தலைவர் திரு. பொ. லெ. பொன்னுசாமி, ஐ. ஏ. எஸ். அவர்கள் தலைமையில் கவியரங்கம் நடைபெற்றது. கவிஞர்கள், முனைவர்கள், பேராசிரியர் பலர் பல்வேறு தலைப்புகளில் உரையாற்றினர். கழக ஆட்சியர் உயர்திரு இரா. முத்துக் குமாரசாமி, எம். ஏ., பி. லிப். அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார். மறுநாள் கலைமாமணி தருமபுரம் எஸ் ஞானப்பிரகாசம் அவர்கள் தேவார, திருவருட்பா இசை பாடினார். சித்தாந்தப் புலவர் தா. ம. பார்த்தசாரதி நன்றி கூறினார்.

## "மீட்போம் தமிழீழம்" நூல் வெளியீட்டு விழா

தமிழ் ஈழ விடுதலைப் புலிகளுக்கு நிதியளிப்பும், மருத்துவர் மறையரசனாரின் 'மீட்போம் தமிழீழம்' என்னும் நூல் வெளியீட்டு விழாவும் 28—4—85 அன்று நீடாமங்கலம் பெரியார் அரங்கில் திரு. ந. பாலசுப்பிரமணியன், எம். ஏ., பி. எட். அவர்கள் தலைமையிலும், திரு. ஆ. சுப்பிரமணியன் அவர்கள் முன்னிலையிலும் நடை

பெற்றன. மருத்துவர் மறையரசனுரின் 'மீட்போம் தமிழீழம்' என்னும் நூலினை ஈழ விடுதலைப் பாவலர் திரு. காசி ஆனந்தன் அவர்கள் வெளியிட்டுச் சிறப்புரையாற்றினர். விடுதலைப் புலிகள் நூலினைப் பெற்றுக்கொண்டனர். அனைத்துக் கட்சிப் பெருமக்களும் விழாவில் கலந்துகொண்டு உரையாற்றினர். அன்றிரவு, இளைஞர் முத்தமிழ்க் கலை மன்றத்தார் அய்யை உ. குணசேகரனின் 'தாயகமே உனக்காக' என்னும் ஈழ விடுதலை நாடகத்தினை நடத்தினர். மருத்துவர் மறையரசன் நன்றியுரை ஆற்றினுர்.

## தமிழ்மறை ஓதிக் குடமுழுக்கு விழா

அருள்மிகு மனோன்மணி சமேத வெள்ளியங்கிரி சுவாமி திருக்கோயில். பூண்டி, கோவை, குடமுழுக்கு விழா 26—4—85 காலை அறநிலையத்துறை அமைச்சர் மாண்புமிகு இராம. வீரப்பன், அறநிலையத்துறை ஆணையாளர் திரு. ஆளுடைப் பிள்ளை முன்னிலையில் நடந்தேறியது. கௌமார மடம், தவத்திரு. சுந்தர சுவாமிகள், பேரூர் ஆதீனம் சாந்தலிங்க இராமசாமி அடிகளார் தலைமையில் சிவத்திருவாளர்கள் ஆ. தி. அ. ஈசுவரனுர், எம். என். சங்கர நாராயணன், மு. பெ. சத்தியவேல் முருகன், திருநாவுக்கரசு ஆகியோர் தமிழ் மறை ஓதிக் குடமுழுக்கு விழாவினை நடத்தினுர்கள்.

## மகளிர் திருநாள் விழா

சென்னை, வியாசர்பாடி, மாக்கவி பாரதி நகர் "முத்தமிழ் ஆய்வு மன்றத்தின்" சார்பில் 23—4—85 செவ்வாய்க் கிழமையன்று "மகளிர் திருநாள் விழா" மிகச் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. வடசென்னை பாரதி மகளிர் கல்லூரிப் பேராசிரியர் முனைவர் திருமதி நிர்மலா பழனிவேலு அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கினுர். இராணி மேரிக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் முனைவர், கவிஞர், திருமதி சரளா இராசகோபாலன் அவர்கள் "வேத நாயகர் கண்ட பெண்கள்" என்னும் பொருள் குறித்துச் சொற்பெருக்காற்றினுர். அவர்தம் உரையில் வேதநாயகம் பிள்ளை அந்தக் காலத்திலேயே, அஃதாவது நூறு ஆண்டுகளுக்கு முன்னமேயே, பெண்ணின் பெருமையை எந்த அளவிற்குச் சிறப்பாக எடுத்தோதியுள்ளார் என்பதை விரிவாக விளக்கிக் கூறினுர். பெருந்திரளாக வந்திருந்த அனைவரையும் திருமதி கோ. தமிழ்ச்செல்வி அவர்கள் வரவேற்றுப் பேசினுர். திருமதி ரமணி உதயசங்கர் அவர்கள் நன்றி நவின்றுர்.

## திருத்தொண்டர் புராண விரிவுரை

சிவநெறிப் பேருரையாளர், சண்டமாருத பிரசங்க இரத்தினுகரம், ஆ. தி. அ. ஈஸ்வர் அவர்கள் ஞாயிறுதோறும் மாலை 4 மணியளவில் மறைமலையடிகள் கலைமன்றத்தில், (34, சாவடித் தெரு, பல்லாவரம், சென்னை) திருத்தொண்டர் புராணத் தொடர் விரிவுரை ஆற்றுகிறுர்; சைவத் திறன் ஆய்வு அடிப்படையில் தெளிவு தரும் இவ் விரிவுரையினைக் கேட்கத் திரண்டு வருக!

## திரு. ந. ரா. முருகவேள் அவர்கள் மறைவுக்கு இரங்கல்

செந்தமிழ் வேந்தர் திரு. ந. ரா. முருகவேள் அவர்கள் மறைவு குறித்து 28—4—85 மாலை பல்லாவரம் மறைமலையடிகள் கலை

மன்றத்தில் இரங்கற் கூட்டம் நடைபெற்றது. சிவத்திரு ஆ. தி. அ. ஈசுவரனார், திரு. ந. ரா. முருகவேளும் மறைமலையடிகளும் எனும் பொருள்பற்றிச் சொற்பொழிவாற்றினர்.

## ஆங்கிலப் பழமொழியாக்கம்—ஒரு வேண்டுகோள்

தமிழன்பர்களே!

தமிழ்ப் பண்பாட்டின் பல்வேறு சிறப்புகளை ஆங்கில மொழி வாயிலாக உலகிற்கு அறிமுகப்படுத்தும் நோக்கத்துடன், ஒரு திட்டம் வகுத்துள்ளார் டாக்டர் வ. பெருமாள் அவர்கள். அதற்கு உங்கள் வட்டத்திலும், மாவட்டத்திலும் வழங்கும் தமிழ்ப் பழமொழி களையும், நீங்கள் பலர் வாயிலாகக் கேட்ட பழமொழிகளையும் கீழ்க் காணும் முகவரிக்கு அனுப்புமாறு கேட்டுக் கொள்ளுகிறார்.

டாக்டர் வ. பெருமாள், எம். ஏ., பி. டி., எம். ஆர். ஏ. எஸ்.,
'பண்பகம்' சுவர்ண நகர், இராபர்ட்சன் பேட்டை,
கோலார் தங்கவயல்-563122.

## மறைமலையடிகள் நூலக வளர்ச்சிக்கு நன்கொடை

(முன் இதழ் ௩௪௪ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்கள் (கழக ஆட்சியர்) | 10 | 00 |
| திரு. ஆ. சுப்பையா பிள்ளை அவர்கள் (கழக மேலாளர்) | 5 | 00 |
| கயப்பாக்கம் திரு. முத்துலிங்கா ரெட்டியார் அவர்கள் | 5 | 00 |
| திரு. A. T. A. ஈஸ்வர் அவர்கள் | 5 | 00 |
| சூரன்குடி திரு. அ. ஆறுமுகம் அவர்கள் | 5 | 00 |
| கல்லை. தே. கண்ணன் அவர்கள் (ஆசிரியர் 'வள்ளுவர்வழி') | 5 | 00 |
| திரு. தூத்துக்குடி ந. ஆறுமுகம் பிள்ளை (சித்திரை, வைகாசி) | 10 | 00 |
| திரு. K. வேணுகோபால் அவர்கள் மேலாளர், சாந்தி தியேட்டர், சென்னை-2 (தம் அன்னையார் நினைவாக) | 25 | 00 |
| திரு. G. சுப்பிரமணியன், கிளை மேலாளர், ஓரியண்டல் இன்சூரன்சு கம்பெனி தி. நகர், சென்னை-17 | 10 | 00 |
| திரு. சீனி விசுவநாதன், சென்னை-35 | 5 | 00 |

———

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80. பிரகாசம் சாலை, சென்னை-108. அப்பர் அச்சகத்தில்
திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிப்.

## கழகப் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| தமிழ் வளம்—தமிழகப் புலவர் குழு | | (அச்) |
| பாவாணர் கடிதங்கள்—கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன் | 15 | 00 |
| அறிவியல் பூங்கா இராம் குமார் | 7 | 00 |
| 100 ஆண்டுகளுக்கு முன் திருநெல்வேலி மாவட்டம் —ச. சுந்தரராசன், நெல்லை | 25 | 00 |
| இன்பவல்லி (இலக்கிய நாடகம்) —கவிஞர் சி. து. கன்னிசாமி | 14 | 00 |
| மின் உற்பத்தியில் பன்முறைகள் —எஸ். சுந்தர சீனிவாசன், பி.இ., டி. எல். எல். | 6 | 00 |
| குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்கள் பாடல்கள் | 25 | 00 |
| கலைவளர்த்த திருக்கோயில்கள்—டாக்டர் இரா. கலைக்கோவன் | 15 | 00 |
| சிலப்பதிகாரம் மதுரைக்காண்டம் —நாவலர் ந. மு. வே. நாட்டார் உரை | 25 | 00 |
| அறிவியல் களஞ்சியம்—இராம் குமார் | 7 | 00 |
| பட்டதெல்லாம் போதும்—சிறுகதைத் தொகுப்பு | 10 | 00 |

## தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| மராட்டியர் செப்பேடுகள் (ஆங்கிலச் சுருக்கத்துடன்) —புலவர் செ. இராசு | 150 | 00 |
| கலித்தொகை (மறுபதிப்பு)—நச்சினார்க்கினியர் உரை —இ. வை. அனந்தராமையர் பதிப்பு | 150 | 00 |
| சங்க இலக்கியக் கருத்தரங்குக் கட்டுரைகள் | 30 | 00 |
| ஆராய்ச்சித் தொகுதி—மு. இராகவையங்கார் | 100 | 00 |
| தொல்-சொல்-தெய்வச்சிலையார் உரை | 60 | 00 |
| தொல்காப்பியம்-நன்னூல்-சொல்லதிகாரம் —க. வெள்ளைவாரணனார் | 75 | 00 |
| நன்னூல் காண்டிகை உரை—ஆறுமுக நாவலர் பதிப்பு | 65 | 00 |
| பெரிய திருமொழி உரையும் தமிழாக்கமும் —டாக்டர் தெ. ஞானசுந்தரம் (நூலகப் பதிப்பு) | 180 | 00 |
| (பொதுப் பதிப்பு) | 130 | 00 |
| நீலகேசி (உரையுடன்) —பேரா. சக்கரவர்த்தி நயினார் பதிப்பு | 140 | 00 |
| சட்டவியல்—பேரா. மா. சண்முகசுப்பிரமணியம் | 92 | 00 |
| ,, ,, (பொதுப் பதிப்பு) | 36 | 00 |
| தஞ்சை மராட்டிய மன்னர்களின் அரசியலும் சமுதாய வாழ்க்கையும் —பேரா. கே. எம். வேங்கடராமையா | 155 | 00 |

நூல்கட்குக் கழிவு 25%—அஞ்சற் செலவு தனி. பணவிடை மூலம் அல்லது வரைவோலை மூலம் கட்டணங்கள் அனுப்பலாம்.

விவரங்களுக்கு :

பதிப்புத்துறை இயக்குநர்,

தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்-613 001.

---

## "செந்தமிழ்ச் செல்வி"

| ஆண்டுக் கையொப்பம் | | வாழ்நாள் கையொப்பம் | |
|---|---|---|---|
| உள்நாடு ரூ. | 20 - 00 | உள்நாடு ரூ. | 200 - 00 |
| வெளிநாடு ரூ. | 80 - 00 | வெளிநாடு ரூ. | 600 - 00 |